# மங்கை

செப்டம்பர்' 92

☆ வரம் தரும் விநாயகர்

☆ பார்சிலோனா ஒலிம்பிக் பந்தயம்

☆ ஔவையார்

☆ மகளிர் காவல் நிலையம்

☆ சமையற்கலை மற்றும் சிறுகதைகள்

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-

வரும் நவம்பர்' 92 மங்கை

தீபாவளி சிறப்பிதழாக வெளிவருகிறது.

விலை ரூ 8/-

TA—F-1



# அம்புலிமாமா

## செப்டம்பர் 1992



## பொருளடக்கம்




தனிப்பிரதி ரூ. 4-00.
வருட சந்தா ரூ. 48-00.










# உல்லாசம் பெறுவீர், வியப்பூட்டும் துணிகர விளையாட்டுகளில்!

இலவசப் பரிசுகள் – மேகி கிளப் உறுப்பினர்களுக்கு!





இலவசம்! மேகி "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" புதிர்! ஒவ்வொரு 2 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு ஒரு மேகி "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" புதிர் இலவசமாகக் கிடைக்கும்.

**ஹலோ! மேகி கிளப்பில் சேருங்கள்: மேகியின் துணிகர உலகிற்குள் செல்லுங்கள்.**

ஐந்து மேகி நூடுல்ஸ் காலி பேக்குகளிலிருந்து அதன் முன் பக்கத்தில் உள்ள இந்த முத்திரையை வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள் - உங்களுக்குப் பிடித்த இலவசப் பரிசைப் பெற. ஆறு முதல் எட்டு வாரங்களுக்குள் மேகி கிளப்பில் இருந்து குதூகலமளிக்கும் பரிசு உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

மறவாதீர்! உங்களுக்கு விருப்பமான பரிசைக் குறிப்பிட்டு எழுதும்போது, உங்கள் பெயர், முகவரி, பிறந்த தேதி ஆகியவற்றையும் எழுதுங்கள். ஏற்கனவே நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால், உறுப்பினர் எண்ணையும் எழுதுங்கள். இதுவரை உறுப்பினராக ஆகவில்லை என்றால் இப்போது வருகிறது வாய்ப்பு! மேலே உள்ள விவரங்களை எழுதும்போது, உறுப்பினராக விரும்புவதையும் தெரிவியுங்கள். இலவசப் பரிசுடன், இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் உங்களுக்கு அனுப்புவோம்.

எங்கள் முகவரி :

**MAGGI CLUB**
P.O. Box 5788 New Delhi-110 055




மேலும் ஒரு சலுகை: இதுவரை மேகி [illegible] பெற்றுக்கொள்ளவில்லை என்றால், இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள்.

HTA 7728TAM




# அம்புலிமாமா


நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## பண்டிகைகளும் ஒருமைப்பாடும்

ஆண்டின் முதல் ஆறு மாதங்களைவிட பின் ஆறு மாதங்களில்தான் நம் நாட்டில் பண்டிகைகளும் திருவிழாக்களும் கொண்டாடப்படுகின்றன. இவற்றில் பல ஒரு மதத்தைச் சார்ந்ததாக இருந்தும் பிற மதத்தவரும் இவற்றில் உற்சாகத்தோடு கலந்து கொள்கிறார்கள்.

மனித இயல்பு அக்கம்பக்கத்தவர்களின் சந்தோஷங்களில் தானும் கலந்து கொள்வதே. இது ஜாதி மத வேறுபாடின்றி நடைபெறுகிறது. இந்த உணர்வு ஒருவரை ஒருவர் மேலும் நெருங்கிப் பழகச் செய்து அன்பை வளர்க்கிறது.

இந்த மனப்பான்மையை அதிகமாகப் பண்டிகைகளின் போது காண்கிறோம். அப்போது ஒருவரை மற்றவர் நன்கு அறிந்து கொள்ளும் வாய்ப்பு கிட்டுகிறது. முஸ்லிம் அல்லாத ஒருவர் மசூதிக்குப் போய் ஈத் தொழுகையில் கலந்து கொள்ளாவிட்டாலும் அவர் தம் முஸ்லிம் சகோதரருக்கு ஈத் வாழ்த்துக்கள் கூறுகிறார். இதைப்போல கிருஸ்துவர் அல்லாதவர் கிருஸ்துமஸ் நாள் நள்ளிரவு பிரார்த்தனையில் மாதா கோவிலுக்குப் போய் கலந்து கொள்ளாத போதிலும் அவர் தம் கிருஸ்துவ சகோதரருக்குத் தம் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறார். இதுபோல் தீபாவளி, பொங்கல் போன்ற ஹிந்து பண்டிகைகளின் போது பிற மதத்தவர் தம் ஹிந்து சகோதரர்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறார்கள்.

இவ்வாறு பண்டிகைகள் யாவரிடையேயும் அன்பையும் நெருக்கத்தையும் வலுப்படுத்துகின்றன. தசரா, தீபாவளி, கிருஸ்துமஸ், பொங்கல், ஹோலி, பக்ரீத், விஷு, பைசாகி, ஓணம் போன்ற பண்டிகைகள் இத்தகைய உணர்வை வளர்த்து தேசிய ஒருமைப்பாட்டை வலுப்படுத்துகின்றன. நாம் இப் பண்டிகைகளின் வாயிலாக அன்பை வளர்த்து, காழ்ப்புணர்ச்சிகளை ஒதுக்கி எல்லோரும் இன்புற்றிருக்க முயல்வோமாக.


மதிமுகம்: 91 செப்டம்பர் 1992 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

# ஒன்று கூடிப் பாடுவோம் கேம்ப்கோ பாடலை!

''பாலும் க்ரீமும் நிறைந்தது. தின்னத் தின்ன ருசிப்பது.

என்றும் நாங்கள் கேட்பது. அதுவே கேம்ப்கோ க்ரீமி மில்க் சாக்கலேட்''.



# ரியோடி ஜானிரோ மாநாடு



பிரேஜில் நாட்டின் தலைநகரான ரியோடி ஜானிரோவில் கடந்த ஜூன் மாதம் ஐ. நா. சபையின் ஆதரவில் புவி பாதுகாப்பு உச்சி மாநாடு நடைபெற்றது. சுற்றுப்புறச் சூழல் மாசுபடுவதிலிருந்து நம் பூமியைப் பாதுகாக்க என்ன செய்ய வேண்டும், எந்தெந்த திட்டங்கள் வகுக்க வேண்டும் என்பது பற்றி யோசிக்க உலகின் 115 நாடுகளின் தலைவர்கள் இம் மாநாட்டில் கலந்து கொண்டது சிறப்பு அம்சமாகும். மிக அதிக எண்ணிக்கையில் உலகத் தலைவர்கள் ஒன்றுகூடிய மாநாடு இதுதான் எனக் கூறலாம்.

இம் மாநாட்டில் கூடிய அனைவரும் பூமியின் வெப்பம் உயர்ந்து கொண்டே போவது குறித்துக் கவலை தெரிவித்திருக்கிறார்கள். இவர்களது சொற்பொழிவுகள் கவனமாகக் கேட்கப்பட்டன. ஆயினும் இம் மாநாடு தான் அடைய விரும்பிய குறிக்கோளை அடைய முடியவில்லை என்று கிரீன் ப்ளேஸ் என்ற உலகத் தாபனம் ஒன்று கூறுகிறது.

இம்மாநாட்டில் நான்கு சிறுவர்கள் பேசி யாவரையும் சிந்திக்க வைத்தார்கள். அவர்கள் கனடாவிலிருந்து இருவர். ஜெர்மனியிலிருந்து ஒருவர். சிலியிலிருந்து ஒருவர். புவியைக் காக்க வேண்டுமானால் தற்போதைய முறைகளை மாற்றி புதிய முறைகளை நீங்கள் கடைப்பிடிக்க வேண்டும் எனக் கூறவே தாங்கள் வந்திருப்பதாக அவர்கள் அம்மாநாட்டில் கூறினார்கள்.

கனடாவிலிருந்து வந்த பனிரெண்டு வயதுச் சிறுமி சிவான் சுஜூகி "நான் நல்ல எதிர்காலத்திற்காகப் போராடுகிறேன். உலகில் பசியால் வாடும் குழந்தை

களின் தரப்பில் பேசுகிறேன். இவ்வுலகில் ஒவ்வொரு நொடியிலும் துடிதுடித்து இறக்கும் ஒவ்வொரு ஜீவராசியின் சார்பிலும் பேசுகிறேன். வெயிலில் வெளியில் நடக்க நான் அஞ்சுகிறேன். ஏனெனில் அங்குள்ள கிருமிகளால் என் உடல்நலம் பாதிக்கப்படுமே என்பதே இதன் காரணம். இப்புவியை உயர் நிலைக்குக் கொண்டு வராவிட்டாலும் அதைப் பாழ் படுத்த வேண்டாம். இதனை உங்களிடம் கூறவே நாங்கள் எங்கள் சொந்தச் செலவில் இங்கு வந்திருக்கிறோம்'' எனக் கூறினாள்.

இம்மாநாட்டில் "அஜெண்டா 21'' தீர்மானம் ஏற்கப்பட்டது. முன்னேற்ற நாடுகள் கடந்த இரு நூற்றாண்டுகளில் தொழில்களில் முன்னேற்றம் காண இயற்கை வளங்களை சிதைத்துவிடுவதால் சுற்றுப்புறச் சூழலுக்கு பெருத்த தீங்கு விளைவிக்கப்படுகிறது. இதைப் போக்குவது முன்னேற்றம் அடைந்த நாடுகளின் தலையாய கடமையாகும்.




மானிட வர்க்கத்தின் உயர்விற்கு இயற்கை வளங்களை உபயோகப்படுத்திக் கொள்வது தவறல்ல. ஆனால் இதற்கு ஒரு வரம்பு இருக்க வேண்டும். நம் பிரதமர் திரு பி.வி. நரசிம்ம ராவ் ஒரு வடமொழி சுலோகத்தைக் கூறினார். அதன் பொருள் "சமுத்திரமே ஆடையாய், மலைகளே உறுதுணையாய் கொண்ட பூமி தேவியே! என் கால்களால் உன்னை மிதிப்பதற்காக என்னை மன்னித்துவிடு.''

பிரேஜில் நாட்டுத் தலைவர் பேசுகையில் புவியைக் காக்க இதுவே கடைசி வாய்ப்பு என்றும் இதை நழுவவிடக்கூடாது என்றும் கூறினர்.

இம்மாநாடு அதிகமாக எதுவும் செய்ய முடியாது போயினும் வருங்கால இளைஞர் சமுதாயம் புவியைப் பாதுகாப்பார்கள் என்ற நம்பிக்கை ஏற்பட்டுள்ளது.



# பிசாசுகளின் உதவி

சாதாரணப்பட்ட குடும்பத்தினன் சரவணன். அவனது மகள் கமலா மணப் பருவத்தை அடைந்து விட்டாள். இரண்டு மூன்று குடும்பங்களிலிருந்து 'பையன்கள்' வந்து பெண்ணையும் பார்த்தனர். எல்லாம் சரியாக இருந்தும் வரதட்சணை விஷயத்தில் தடைப்பட்டது. அதனால் கமலாவின் திருமணம் எப்படி நடக்கும் என்று சரவணன் திகைத்துக் கொண்டிருந்தான்.

அப்போது வெளியூரில் இருக்கும் அவனது நண்பனான இலட்சுமணன் வந்து "சரவணா! உன் பெண்ணுக்கு ஏற்ற இடமாகப் பார்த்து விட்டேன். பையன் அரசாங்க உத்தியோகத்தில் இருக்கிறான். வரதட்சணை பத்தாயிரம் ரூபாய்தான். கல்யாணத்தை விமரிசையாக நீ நடத்தித் தரவேண்டும். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான்.

சரவணனும் "என்ன இலட்சுமணா! என் நிலை தெரிந்தும் நீ இவ்வளவு பெரிய தொகையை வரதட்சணையாகக் கொடுக்கச் சொல்கிறாயே. இதெல்லாம் என் சக்திக்கு அப்பாற்பட்டது" என்றான். இலட்சுமணனோ "இதைப் பற்றி யோசிக்காமல் வந்திருப்பேனா? இந்த வரன் கிடைத்தது உன் அதிர்ஷ்டமே. நீ கல்யாணத்தை விமரிசையாகச் செய்து கொடு. வரதட்சணைப் பணத்தை நான் உனக்குக் கடனாகக் கொடுக்கிறேன். நீ அதைக் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பிக் கொடுத்தால் போதும்" என்றான்.

சரவணனும் "நீ என்னமோ பணம் கொடுத்து இப்போது உதவுவதாகக் கூறிவிட்டாய். ஆனால் தொகையோ பத்தாயிரம்! இதைச் சேர்க்க எனக்கு எவ்வளவு வருஷங்

—சிவனார் செல்வன்—



கள் ஆகுமோ? அதுவரை நீ காத்திருக்க வேண்டுமே" என்றான்.

இலட்சுமணனும் "இதோ பார்! நான்தான் மெதுவாக வாங்கிக் கொள்வதாகக் கூறிவிட்டேனே. நீ இப்போது கல்யாணத்திற்கான ஏற்பாட்டைக் கவனி. என் பணத்தைத் திருப்பிக் கொடுப்பது பற்றி இப்போதே ஏன் கவலைப்படுகிறாய் எனக்கு ஒரு அவசரமும் இல்லை. நீ கொஞ்சம் கொஞ்சமாக உனக்கு எப்போது சௌகரியமோ அப்போது கொடு. போதும்" என்று கூறினான்.

சரவணனும் அந்த ஏற்பாட்டிற்கு இணங்கினான். அதற்குப் பின் எல்லாம் மளமளவென்று நடந்தன. பிள்ளைவீட்டார் வந்து பெண்ணைப் பார்த்தனர். அவர்களுக்குப் பெண் பிடித்துப் போயிற்று. கல்யாணத் தேதியும் குறிப்பிடப்பட்டு வரதட்சணை பத்தாயிரம் ரூபாயைக் கல்யாணத்தினத்திற்கு முதல் நாள் கொடுப்பதாக சரவணன் ஒப்புக் கொண்டான்.

கல்யாண தினத்திற்கு முதல் நாள் காலையில் மாப்பிள்ளை வீட்டார் வந்து விட்டனர். மத்தியானத்தின் போதே பணத்தோடு வருவதாகக் கூறிய லட்சுமணன் இன்னமும் வரவில்லையே என்று சரவணன் தவியாய்த் தவித்தான். நேரம் ஆக ஆக அவன் பொறுமை இழந்து லட்சுமணன் ஊருக்கே போய் அவனை பார்த்துப் பணத்தை வாங்கிக் கொண்டு வருவது என நினைத்துத் தன் ஊரை விட்டுக் கிளம்பிச் சென்றான்.

இலட்சுமணனின் ஊர் சரவணனின் ஊரிலிருந்து பத்து கிலோ மீட்டர் தூரத்தில் இருந்தது. காட்டுப் பாதை வழியாகப் போனால் சீக்கிரம் போய்விடலாம். சரவணனும் அப்பாதை வழியே சென்று இலட்சுமணனின் வீட்டை அடைந்தான். சரவணனைக் கண்ட இலட்சுமணனும் "ஓ! வந்துவிட்டாயா! பணம் இப்போதுதான் கிடைத்தது. நானே இப்போது கிளம்புவதாக இருந்தேன். நீயே வந்துவிட்டாய். இந்தா! இந்தப் பையில் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது. இதை

மாப்பிள்ளை வீட்டாரிடம் வரதட்சணையாகக் கொடுத்து விடு" என்று கூறிப் பணப் பையைக் கொடுத்தான்.

சரவணனும் பையை வாங்கி இடுப்பில் கட்டிக்கொண்டு காட்டு வழியே திரும்பித் தன் ஊருக்குச் செல்லலானான். அப்போது நன்கு இருட்டி விட்டது. வழியில் அவன் முன் திடீரென ஒரு முகமூடித் திருடன் தோன்றி கத்தியைக் காட்டி "உம் உன்னிடமுள்ள பணத்தைக் கொடு" என்று மிரட்டினான். சரவணன் பயந்து போய் தன்னிடமிருந்த பணப் பையை எடுத்துக் கொடுத்தான். அத்திருடன் அதனை வாங்கிக் கொண்டு போய்விடவே சரவணன் கவலையோடு தள்ளாடிக் கொண்டே போய் ஒரு புளிய மரத்தின் கீழ் உட்கார்ந்தான்.

அப்போது அந்த மரத்தில் இருந்து இரு பிசாசுகள் பேசுவது சரவணனின் காதில் விழுந்தது. ஒரு பிசாசு "இந்த சரவணன் தன் பணம் போய்விட்டதே, எப்படித் தன் மகளின் கல்யாணம் நடக்கும் என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறான்" என்றது. மற்ற பிசாசோ "இவனது மகளின் கல்யாணம் கண்டிப்பாக நடக்கும். இவனிடம் கொள்ளை அடித்த முகமூடித் திருடனை ஒரு நல்ல பாம்பு தீண்டி விட்டது. அவன் சற்று தூரத்தில் இறந்து விழுந்து கிடக்கிறான்" என்றது.



அதைக் கேட்டு சரவணன் எழுந்து கொஞ்ச தூரம் போனான். அங்கே முகமூடித் திருடன் இறந்து விழுந்து கிடப்பதையும் அவனருகே தன் பணப்பையும் ஒரு நகைப் பெட்டியும் இருப்பதைக் கண்டு அவற்றை எடுத்துக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். தன் மனைவியிடம் நடந்ததை எல்லாம் கூறி நகைப் பெட்டியைக் கொடுத்தான். பிறகு முறைப்படி எல்லோர் முன்னும் வரதட்சணை கொடுக்க அவன் ஏற்பாடுகளைச் செய்யலானான்.

கமலா தன் தந்தை கொண்டு வந்த நகைகளை அணிந்து கொண்டு வந்தாள். அவற்றைக் கண்ட மாப்பிள்ளை மாணிக்கத்தின் அக்கா "ஆ! இவை என் நகைகளாயிற்றே.

நேற்று நாங்கள் வரும்போது ஒரு முகமூடித் திருடன் என்னிடமிருந்து பறித்துக் கொண்டான். அது இவர்களுக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டாள்.

சரவணனும் காட்டில் நடந்ததை எல்லாம் சொன்னான். ஆனால் மாப்பிள்ளையின் தந்தை அதை நம்பாமல் ''நீ அந்தத் திருடனோடு கூட்டு சேர்ந்திருக்கிறாய். இந்த மாதிரித் திருட்டுக் குடும்பத்தோடு சம்மந்தம் செய்து கொள்ள எனக்கு இஷ்டம் இல்லை. நாங்கள் இப்போதே எங்கள் ஊருக்குக் கிளம்புகிறோம்'' என்று கூறி எல்லோரையும் அழைத்துக்கொண்டு கிளம்பி விட்டான்.

சரவணன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். அவன் மனைவியும் மகளும் மற்ற உறவினர்களும் திடீரெனக் கல்யாணம் நின்றது பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். யாருக்கும் தூக்கமே வரவில்லை.

விடியும் வேளைக்கு யாரோ வாசல் கதவைத் தட்டுவது கேட்டு கமலா எழுந்து போய் கதவைத் திறந்தாள். அங்கே மாணிக்கம் நின்றது கண்டு திகைத்து நின்றாள். இதற்குள் சரவணனும் அவன் மனைவியும் எழுந்து வந்து வந்தது யார் என்று பார்க்கலானார்கள்.

மாணிக்கம் அவர்களைப் பார்த்து ''மாமா! உங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை என்றால் குறிப்பிட்ட முகூர்த்தத்திலேயே நான் உங்கள் மகளை மணந்து கொள்கிறேன். நான் வரதட்சணை என்று ஒரு பைசாக்கூட வாங்கிக் கொள்ள



மாட்டேன்" என்றான். சரவணனுக்குத் தான் கண்டதும் கேட்டதும் கனவா நனவா என்ற சந்தேகம் வந்துவிட்டது. முடிவாக மாணிக்கம் அடித்துக் கூறியபின் சரவணன் மளமளவென மணச் சடங்குகளைச் செய்யலானான். கமலாவுக்கும் மாணிக்கத்திற்கும் விவாகம் இனிதாக நடைபெற்றது.

அன்று மாலை கமலா மாணிக்கத்திடம் "ஒரு விஷயம் கேட்கட்டுமா? கல்யாணம் வேண்டாம் என்று எல்லோருடனும் நீங்களும் போனீர்களே. ஆனால் திரும்பி வந்து வரதட்சணையே வேண்டாம் என்று கூறி என்னை மணந்து கொண்டீர்களே. இவ்வளவு விரைவில் உங்கள் மனம் எப்படி மாறியது?" என்று கேட்டாள். மாணிக்கமும் சிரித்துக் கொண்டே சொல்லலானான்.

"நான் என் தாய் தந்தையருடன் இங்கிருந்து சென்றேனா? அவர்கள் சென்ற வழியில் செல்லாமல் காட்டு வழியே நான் மட்டும் பிரிந்து சென்றேன். அங்கே ஓரிடத்தில் ஒரு புளிய மரத்தின் கீழ் அமர்ந்து நடந்ததைப் பற்றி யோசிக்கலானேன். அப்போது அம்மரத்தின் மீதிருந்த இரண்டு பிசாசுகள் பேசிக் கொள்வதைக் கேட்டேன்.

ஒரு பிசாசு மற்றதிடம் "நீ எந்தக் காரணத்தால் இப்படிப் பிசாசாக மாறினாய்?" என்று கேட்டது. அதற்கு அந்தப் பிசாசு "நான் உயிரோடு இருந்த காலத்தில் சில குடும்பங்களைக் கலைத்து அந்த பாவத்தைச் சுமந்து இப்படிப் பிசாசாகித்



திரிகிறேன். ஆமாம் நீ எதற்காக பிசாசாக மாற வேண்டி வந்தது?'' என்று கேட்டது.

மற்ற பிசாசும் "நான் என் இரு மகன்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தேன். என் இரு மருமகள் களையும் சம்மந்திகளையும் வரதட் சணை விஷயத்தில் கொடுமைப் படுத்தி என் இஷ்டப்படி பணம் கறக்கலானேன். என் தொல்லை பொறுக்க முடியாமல் ஒரு சம்மந்தி சன்னியாசியாகி ஓடிப்போய் விட் டார். மற்ற மருமகளோ பைத்தியம் பிடித்து அலையனானாள். இந்தப் பாவங்கள் என்னைச் சூழ நான் பிசாசாகி விட்டோன்'' என்றது.

அப்போது முதல் பிசாசு "இந்த மாணிக்கம், அவன் தாய் தந்தை யர் பற்றி என்ன நினைக்கிறாய்? இவர்கள் தாம் சம்மந்தம் செய்யப் போன இடத்தில் பெண் வீட்டா ரிடம் அவர்களது சக்திக்கு மிஞ் சிய தொகையை வரதட்சணை யாகக் கேட்டதோடு அவர்கள் மீது அபாண்டமாகத் திருட்டுப் பட்ட மும் கட்டினார்கள். கல்யாணத்தை யும் நிறுத்தி விட்டுக் கிளம்பிப் போனார்கள். சரவணன் உண்மை யைக் கூறியும் இவர்கள் அதை நம்பவில்லை. கமலா போன்ற நல்ல பெண்ணை இவர்கள் உதறித் தள்ளி அவளுக்குக் கெட்ட பெயர் ஏற்படும்படிச் செய்து விட்டார் கள். இந்தப் பாவத்திற்கு இவர் களும் நம்மைப் போலப் பிசாசு களாகித் திரியத்தான் வேண்டும்'' என்றது.

இதைக் கேட்ட நான் திகிலடைந் தேன். உன் தந்தை கூறியது உண்மை என உணர்ந்தேன். வரதட்சணை வாங்குவது எவ்வளவு கொடுமை யானது என்று தெரிந்து கொண் டேன். அதனால்தான் உடனேயே திரும்பி உங்கள் வீட்டிற்கு வந் தேன்.

அதைக் கேட்ட கமலா தான் பார்க்காத அந்தப் பிசாசுகளுக்கு மனதார நன்றி கூறினாள்.






## 5

*[வசந்த மாளிகையிலிருந்து மாயமாய் மறைந்த வீரபுர இளவரசி வித்தியாவதியைத் தேட வீரபுர மன்னன் வீரசேனன் கட்டளை இட்டான். அதன்படி சேனாதிபதி உக்கிரசேனன் வீரர்களை நான்கு திசைகளிலும் அனுப்பினான். இளவரசியைத் தேடிக் கண்டுபிடித்து வர மன்னனின் அனுமதிகோரி ஒரு வாலிபன் வந்தான். அதன்பிறகு—]*

அரண்மனைக்குள் ஒரு காவலாளி அந்த வாலிபனை அழைத்துச் சென்றான். மன்னனைக் கண்டதும் அந்த வாலிபன் பணிவுடன் வணங்கி நின்றான். மன்னன் அவனை உற்றுப் பார்த்தான். எளிய ஆடையில் வசீகரத் தோற்றத்துடன் கம்பீரமாக விளங்கிய அவ்வாலிபன் சேனாதிபதி கூறியது போல ஒரு அலாதிப் பிறவிதான் என மன்னன் கண்டு கொண்டான்.

சேனாதிபதியும் "இவன்தான் நான் சொன்ன வாலிபன்" எனவே மன்னனும் "நீ யாரப்பா? உன் பெயர் என்ன? என் வீரர்களில் பலர் நான்கு திக்குகளிலும் போய்த் தேடி இளவரசியைக் கண்டுபிடிக்க முடியாமல் வந்து விட்டார்கள். நீயோ யாரையும் துணைக்குக் கூட அழைத்துக் கொள்ளாமல் போய்த்



தேடப் போகிறாயமே. அது உன் னால் முடியுமா? உன்னால் இளவரசியை அடையாளம் கண்டுகொள்ள முடியுமா?" என்று கேட்டான்.

அந்த வாலிபனும் "அரசே! என் பெயர் மகேந்திரன். தலை நகரிலிருந்து சற்று தூரத்திலுள்ள ஒரு கோவிலில் நானும் என் தாயாரும் வசித்து வருகிறோம். என் தாயார் மலர் மாலைகளைக் கட்டி கோவிலின் தேவிக்கு அர்ப்பணிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறாள். என் தந்தை என் மூன்றாவது வயதிலேயே இறந்து விட்டார். இதன் பிறகு எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் நானும் ஏதாவது வேலை செய்து சம்பாதித்து நானும் என் தாயும் வாழ்ந்து வருகிறோம்" என்றான்.

மன்னனும் "சரி, நீ மேற்கொள்ளும் வேலை எவ்வளவு சிரமமானது என்று யோசித்துப் பார்த்தாயா?" என்று கேட்கவே மகேந்திரனும் "ஆமாம்" அரசே! நன்கு யோசித்த பிறகே நான் இந்த முயற்சியில் முழுமூச்சுடன் இறங்கத் தீர்மானித்து விட்டேன். நான் அரசகுமாரியைப் பார்த்திருந்த போதிலும் நான் தங்களிடமிருந்துதான் அவளைக் காண வந்திருக்கிறேன் என அவள் நம்ப ஏதாவது ஒரு பொருளை எனக்கு கொடுங்கள்" என்றான்.

மன்னனும் "நீ கூறுவது சரிதான். நீ என் தரப்பிலிருந்துதான் வந்திருக்கிறாய் என அவள் நம்ப ஏதாவது ஒரு பொருளைக் கொடுத்தாக வேண்டும். எதைக் கொடுப்பது?" என்று கேட்டான்.

மகேந்திரனும் "அரசே! இளவரசிக்கு பிடித்தமான ஆடைகளில் எதையாவதையோ அல்லது அவள் அணியும் நகைகளில் எதையாவதையோ கொடுத்தால் அவளைப் பார்க்கும்போது அதைக் காட்டினல் அவளுக்கு என் மீது நம்பிக்கை ஏற்படும்" என்றான்.

மன்னனும் உக்கிரசேனனைப் பார்த்து" இவன் கூறுவது சரிதான். இவனிடம் எதைக் கொடுத்து அனுப்பினால் என் மகளுக்கு இவன் மீது நம்பிக்கை ஏற்படும்? அதை நீயே சொல்" என்று கேட்டான்.

அப்போது உக்கிரசேனன் "ஏதா

வது பொருளைக் கொடுத்தால் அது தொலைந்து போனாலும் போய் விடும். அல்லது வேறு யார் கையி லாவது அது அகப்பட்டு விடும். அத னால் பொருள் எதையும் கொடுக்க வேண்டாம்'' என்றான்.

மன்னனும் "சேனாதிபதி கூறுவது சரிதான். வித்தியாவதி உன்னை நம்பும்படிச் செய்ய வேறு வழி இருக்கிறது. நீ மட்டும் என் மகளைக் கண்டுபிடித்து அழைத்து வந்து விட்டால் உனக்கு ஏராளமான பரிசுகளைத் தருகிறேன்'' என்றான்.

மகேந்திரனோ "அரசே! நான் பரிசிற்காக ஆசைப்பட்டு இம்முயற் சியில் இறங்கவில்லை. மக்களைக் காக்கும் மன்னரின் துயரைப் போக்கு வது என் கடமை எனக் கருதியே இப்பணியை மேற்கொள்கிறேன். நான் திரும்பி வரும்வரை என் தாய்க் குத் தக்க ஆதரவும் பாதுகாப்பும் வேண்டும். அதைத்தான் நான் தங் களிடம் கோருவது'' என்றான்.

மன்னனும் "உன் தாயாரைப் பற்றிக் கவலைப்படாதே. அவரைக் கவனித்துக் கொள்வது இனி என் பொறுப்பு. நீ எப்போது கிளம்பப் போகிறாய்?'' என்று கேட்டான். மகேந்திரனும் "நாளையேதான். நான் இளவரசியைக் கண்டதும் என்னை நீங்கள்தான் அனுப்பினீர் கள் என்று அவள் தெரிந்துகொள்ள ஏதோ ஒன்று சொல்வதாகக் கூறினீர்களே. அதைச் சொல்கிறீர்



களா?'' என்று கேட்டான்.

மன்னனும் "நான் சொல்லப் போவது பரமரகசியம். இது என்னை யும், என் மனைவியையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. இதை இப்போது உனக்குச் சொல்கிறேன். இளவரசியின் வலது புஜத்தின் கீழ் ஒரு மச்சம் இருக்கிறது. இதை நீ அவளிடம் கூறினால் உன்னை நான் அனுப்பியதாக நம்புவாள். இனி நீ எவ்விதக் கவலையும் இல்லா மல் செல்லலாம்'' என்று கூறிவிட்டு அந்தப்புரத்திற்குச் சென்றான்.

சேனாதிபதியும் "மகேந்திரா! நீ இன்று மாலை உன் தாயாரை யும் அழைத்துக் கொண்டு வா. என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டுமோ அவற்றை எல்லாம்



செய்து விடலாம்" என்றான். மகேந்திரனும் அவ்வாறே செய்வதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

வீட்டை அடைந்த மகேந்திரன் தன் தாயாரிடம் "அம்மா! இன்று மன்னனைப் பார்த்து விட்டு வந்தேன்" என்றான். அவனது தாயாரும் "ராஜாவைப் பார்த்தாயா? என்ன உத்தியோகம் கிடைத்தது?" என்று ஆவலுடன் கேட்டாள்.

மகேந்திரனும் "நான் அவரிடம் உத்தியோகம் கேட்கப் போகவில்லை. இளவரசியைத் தேடிவர அனுமதி பெற்றேன்" என்றான். அவனது தாயாரும் "இளவரசியைத் தேடிக் கொண்டா போகப் போகிறாய்? எங்கே போய் தேடுவாய்? யாராவது கூடச் செல்கிறார்களா?" என்று கேட்டாள்.

மகேந்திரனும் "இல்லை. நான் மட்டும் தனியாகவே போகிறேன். கவலைப்படாதே. நான் திரும்பி வரும் வரை உன்னை நல்ல விதமாகக் கவனித்துக் கொள்ள ஏற்பாட்டையும் செய்திருக்கிறேன். மன்னரே இந்தப் பொறுப்பை ஏற்பதாக வாக்களித்திருக்கிறார். இன்று மாலை நாம் சேனாதிபதி உக்கிரசேனரைச் சந்திக்கப் போகிறோம்" என்றான்.

அதைக் கேட்ட அவனது தாய் "உன்னை விட்டுப் பிரிந்து எப்படி இருப்பேன்? இவ்வளவு நாட்களாக நாம் ஒன்றாகத்தானே கோவிலருகே வாழ்ந்தோம். கஷ்டப்பட்டு சம்பாதித்தாலும் இருவரும் ஒன்றாக இருக்கும் மனநிறைவைப் பெற்றிருந்தோம். இப்போதோ அதை இழக்கப் போகிறோம்" என்றாள்.

மகேந்திரன் தன் தாயாருக்கு ஆறுதல்கூறி "அம்மா! நீ கவலைப் படாதே. நான் விரைவிலேயே அரச குமாரியைக் கண்டுபிடித்து அழைத்துக் கொண்டு வந்து விடுவேன். நான் இல்லாத போது உனக்கு உணவிற்கு எவ்விதக் குறையும் இராது. நீ தங்கவும் இடவசதி செய்து கொடுக்கப்படும்" என்று கூறினான். அவளும் தன் மகன் ஒரு நல்ல வேலையைச் செய்யப் போகிறான் என நினைத்து மனதைத்



தேற்றிக் கொண்டாள்.

மாலையில் மகேந்திரன் தன் தாயாரை அழைத்துக் கொண்டு போய் சேனாதிபதி உக்கிர சேனனைக் கண்டான். சேனாதிபதியும் அவர்களை அன்புடன் வரவேற்றான். மகேந்திரனின் தாயாரை அவன் வணங்கி "தாயே! உங்கள் மகன் மகத்தான பணியில் ஈடுபடப் போகிறான். அதில் வெற்றிபெற்றே திரும்புவான். இதனால் மன்னரின் குடும்பமும் இந்நாட்டு மக்களும் மகிழ்ச்சி அடைவார்கள். உங்கள் மகன் திரும்பி வரும்வரை உங்களை கவனித்துக் கொள்ளும் பொறுப்பை மன்னர் என்னிடம் விட்டிருக்கிறார். உங்களுக்குத் துணையாகவும் பணி புரியவும் ஒரு பணிப்பெண்ணை நியமிக்கிறேன். உங்களுக்கு தினமும் மூன்று வேளை உணவு அரண்மனையிலிருந்து வரும். உங்களுக்கு ஒரு குறையும் இல்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் முழுமனதுடன் உங்கள் மகனை ஆசீர்வதித்து அனுப்புங்கள்" என்றான்.

பிறகு அவன் மகேந்திரனிடம் "நீ உன் தாயாரைப் பற்றிச் சற்றும் கவலைப்பட வேண்டாம். நான் நன்கு கவனித்துக் கொள்கிறேன். நீ காட்டுப் பகுதியில் மேற்கு திசையில் தேடுவது நல்லது. நம் ஆஸ்தான சோதிடர் வாசஸ்பதி கூறியதும் அதுவே. மேலும் மன்னர் உன்னிடம் சொன்ன விஷயம் ஞாபகத்தில் இருக்கட்டும். நாளை காலையில் நீ கிளம்பிச் சென்று வெற்றியுடன் திரும்பி வா" எனக் கூறி அனுப்பினான்.

மகேந்திரனும் அவனது தாயும் சேனாதிபதியிடம் விடை பெற்றுக் கொண்டு தம் வீட்டை வந்தடைந்தார்கள். அன்றிரவு மகேந்திரன் நன்கு தூங்கி அதிகாலையில் எழுந்தான். அவன் தன் தாயை வணங்கி அவளது ஆசிகளைப் பெற்று வீட்டை விட்டுக் கிளம்பினான். தாயும் வழியில் அவன் உண்ண உணவைக் கட்டிக் கொடுத்தாள்.

மகேந்திரன் சாரஸசரோவரின் நடுவேயுள்ள வசந்த மாளிகையருகே சென்று அதுவரை பார்த்ததே இல்லை. எனவே அப்பகுதியைச்

சுற்றிப் பார்க்கத் தீர்மானித்துக் கொண்டான். அவன் சாரஸசரோ வரத்தின் கரையை அடைந்து அங்கு ஒரு படகு இருப்பதைக் கண்டான். படகோட்டியும் அதனருகேதான் இருந்தான். மகேந்திரன் அவனை அணுகிய போது அவனும் "ஐயா! நீங்கள் அரண்மனையிலிருந்தா வரு கிறீர்கள்?" என்று கேட்டான்.

மகேந்திரனும் "என் அப்படிக் கேட்கிறாய்?" என்று வினாவவே அவனும் "அரசகுமாரியைப் பற்றிய புதிய தகவல் ஏதாவது உண்டா என்று அறிந்து கொள்ளத்தான் கேட்டேன். ஏனெனில் வசந்த மாளிகையில் உள்ள கிழப்பணிப் பெண்ணைப் பற்றித்தான் கவலையாக இருக் கிறது. பாவம் அவள் அந்த மாளிகை யில் தனியாக இருக்கிறாள். எப் படியும் அரசகுமாரி அங்கு வருவாள் என அவள் காத்துக் கொண்டே இருக்கிறாள். அவளுக்கு தினமும் சாப்பிட உணவு கொண்டு வரு கிறார்கள். அதைச் சாப்பிட்டு விட்டு அவள் அங்கேயே கிடக் கிறாள். அவள் நிலை பரிதாபகர மாக இருக்கிறது. அதனால்தான் கேட்டேன்" என்றான்.

மகேந்திரனும் "இன்னும் எது வும் தெரியவில்லை. அவளைத் தேடிக் கண்டு பிடிக்கவே கிளம்பி வந்திருக்கிறேன்" என்றான். பட கோட்டியும் "ரொம்ப சந்தோஷம். ஆனால் ஒன்று மட்டும் சொல் கிறேன். அரசகுமாரியைக் கவர்ந்து கொண்டு யாரும் இவ்வழியாகப் போகவில்லை" என்றான்.

மகேந்திரனும் "ஓ! அப்படி யானால் அந்த மாளிகையிலிருந்து வேறு ஏதாவது ஒரு வழியில் அவளைக் கவர்ந்து கொண்டு சென்றிருக்க வேண்டும். அப்படி வேறு வழி உள்ளதா என்று தேடிப் பார்க்கிறேன்" என்றான்.

படகோட்டியும் "பாருங்கள். உங் கள் முயற்சி வெற்றி பெற வாழ்த்து கிறேன்" எனக் கூறினான்.

(தொடரும்)



# வான் உயரம் அந்தக் கோல்!

ஒரு சிற்றரசர் தம் விகடகவிகள் இருவருடன் ஒருநாள் உலாவச் சென்றார். அப்போது பச்சைப் பசேலென்று பரவிக் கிடந்த வயல் வெளியைக் காட்டி சங்கரய்யா என்ற விதூஷகன் "ஒரு காலத்தில் இந்த நூறு காணி வயல்கள் என் முப்பாட்டனாருக்குச் சொந்தமாக இருந்தவை" என்றான்.

அப்போது சுந்தரய்யா என்ற விகடகவி "ஆமாம் பிரபு! மேடு பள்ளமாக இருந்த இப்பகுதியில் என் முப்பாட்டனார் மாதம் மும்மாரி பெய்யச் செய்து வளமாக்கினார். அதற்கு அவர் மேகங்களை மிரட்டி நிறுத்தி மழை பெய்யும்படிச் செய்ய ஒரு நீண்ட கோல் வைத்திருந்தார். அது ஆகாயத்தைத் தொடும் நீளத்தில் இருந்தது" என்றான்.

சிற்றரசரும் "அடேயப்பா! அவ்வளவு நீளமான கோலை அவர் எங்கே வைத்திருந்தார்?" என்று கேட்க, சங்கரய்யாவும் "இவரது பாட்டனார் அதனை என் முப்பாட்டனாரின் ஒரு வயலின் ஒரு மூலையில் போட்டு வைத்திருந்தார்" என்றான். அது கேட்டு சிற்றரசர் தமக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு "இப்போது அந்தக் கோல் எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்.

சுந்தரய்யாவும் "ஒருமுறை என் முப்பாட்டனார் ஏதோ ஒரு காரணத்தால் கோபம் கொண்டு தம் கோலால் மேகங்களைப் பலமாக அடித்து விட்டார். அதனால் அவை பயந்து போய் சேர்ந்தாற்போல ஐந்து நாட்களுக்குப் பலத்த மழை பெய்வித்தன. அதனால் எங்கும் வெள்ளப் பெருக்கு ஏற்பட அதில் அந்த கோல் அடித்துக் கொண்டு போகப்பட்டது" என்றான்.

சங்கரய்யாவும் "அந்தக் கோல் போன பிறகு என் முப்பாட்டனார் தாம் இனி அந்த நிலங்களில் முன்போல விவசாயம் செய்ய முடியாது என எண்ணி அவற்றைப் பிரித்துப் பலருக்கு தானமாகக் கொடுத்து விட்டார். அதனால்தான் இந்த வயல்கள் இப்போது எங்களுக்குச் சொந்தமாக இல்லை" என்று கண்களில் நீர்த்ததும்பக் கூறினான்.

இதைக்கேட்ட சிற்றரசர் பலமாகச் சிரித்து "ஆகா! இரண்டு பேர்களும் சேர்ந்து அருமையான கதை சொன்னீர்கள்" என்று கூறி ஆளுக்குப் பத்து வராகன்கள் வீதம் பரிசளித்தார்.






# விரும்பாத காரணம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த நடுநிசியில். அரண்மனையில் சுகமாகப் படுத்துத் தூங்காமல் ஏன் இந்தப் புயலிலும் மழையிலும் கஷ்டப்படுகிறாய்? சிலர் தாம் பிடிவாதமாக ஒரு வேலையைச் செய்ய முனைந்து முடிவில் ஏதோ ஒரு காரணத்தால் தம் மனதை மாற்றிக் கொள்வதும் உண்டு. இதை விளக்க மாயேந்திரன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறி கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



கலிங்க நாட்டு மன்னனின் மகள் கனகாங்கி அழகானவள் என்று பெயர் பெற்றிருந்தாள். அவளை மணந்து கொள்ள பல நாடடு அரச குமாரர்கள் முன் வந்தனர். கலிங்க மன்னன் தன் மகளிடம் அது பற்றி பேசவே அவளும் "தந்தையே! உங்கள் மனதில் எனக்கு ஏற்றவர் யார் என்று தோன்றுகிறதோ அவரையே நான் மணந்து கொள்கிறேன்" என்றாள்.

கனகாங்கி மாளவ நாட்டு இளவரசனை மணக்க எண்ணி இருந்தாள். அவன் அழகன். இளைஞன். நற்குணங்கள் கொண்டவன். அவள் தன் விருப்பத்தைத் தன் தந்தையிடம் தெரிவிக்காமல் இருந்தபோதிலும் கலிங்க மன்னனுக்கு அவ் விஷயம் தெரியும்.

அப்போது மன்னன் "நீ மாளவ நாட்டு இளவரசனை மணக்க விரும்புகிறாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீ அங்க நாட்டு இளவரசனை மணந்தாலே நம் நாடு அவனது படையெடுப்பிலிருந்து தப்பும். அவன் கொடியவன். பார்க்க பயங்கரமாகவும் இருப்பான். அதனால்தான் என்ன செய்வது என்று யோசிக்கிறேன்" என்றான்.

தன் தந்தை கூறியதைக் கேட்டு கனகாங்கி திகைத்துப் போனாள். ஆனால் மறுநிமிடமே அவன் கூறிய காரணத்தை யோசித்துப் பார்த்தாள். அப்போது அவளுக்கு தன் தந்தை அவ்விதம் ஒரு முடிவுக்கு வந்தது அந்த நிலையில் சரியே என்று தோன்றியது.

கனகாங்கியும் "தந்தையே! நான் என் சுகத்தைவிட நாட்டின் நலனையே உயர்வாகக் கருதுகிறேன். எனவே பார்க்க விகாரமாக இருந்தாலும் அங்க நாட்டு இளவரசனுக்கே என்னைத் தாங்கள் மணமுடித்து வைக்கலாம். இதனால் நம் நாட்டிற்கு எவ்வித ஆபத்தும் நேராது என்றால் இந்த விவாகத்தை நான் மனப்பூர்வமாக ஏற்கிறேன். எனக்கு என் தாய்நாட்டின் நலனே முக்கியம். என் சுகம் அல்ல" என்றாள்.

அது கேட்டு மன்னன் மனம் மகிழ்ந்து போனான். ஆனாலும் தன் மகளின் மனம் படும்பாட்டை

அவன் உணர்ந்தான். அவள் எவ்வளவு சிரமப்பட்டுத் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு அந்த பதிலைக் கூறி இருக்க வேண்டும் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

மன்னனும், "உன் நாட்டுப்பற்றையும் உனக்கு உன் தந்தையின் மீது உள்ள நம்பிக்கையையும் பாராட்டுகிறேன். உன் போன்ற நல்லெண்ணம் படைத்த பெண்களுக்கு அவர்களது விருப்பப்படியே எல்லாம் நடக்கும்" என்றான்.

கலிங்க நாட்டில் சித்திராரணியம் என்ற காட்டில் மாயேந்திரன் என்ற ஒரு மந்திரவாதி இருந்தான். அவன் பல துஷ்ட தேவதைகளை ஆராதித்துப் பல சக்திகளைப் பெற்றிருந்தான். அவன் பூவுலகில் தான் ஏகச் சக்கரவர்த்தியாக விளங்க வேண்டும் என்று ஆசை கொண்டான். அந்த ஆசை அவன் கனகாங்கியை மணந்து கொண்டால் நிறைவேறும் என்று ஒரு குட்டி தேவதை அவனிடம் கூறியது. அதுவும் கனகாங்கியே அவனை மணக்க முன் வர வேண்டும் என்றும் அவன் அவளை நிர்பந்திக்கக் கூடாது என்றும் அப்படிச் செய்ய முயன்றால் அவன் அடைந்துள்ள சக்திகள் எல்லாம் மறைந்து அவன் சாதாரண மனிதனாக ஆகிவிடுவான் என்றும் கூறியது.

மாயேந்திரன் தன் மந்திர சக்தியால் தன்னை யார் கண்ணுக்கும் புலப்படாமல் செய்து கொண்டு கனகாங்கியின் அந்தப்புரத்தை அடைந்தான். அப்போது கனகாங்கி பஞ்சணையில் படுத்து மெய்மறந்து தூங்கிக் கொண்டிருந்தாள். அவளது அழகைக் கண்டு அவன் மலைத்துப் போனான்.



கனகாங்கி காலையானதும் கண் விழித்து எழுந்தாள். அப்போது மாயேந்திரன் தன் சுய உருவத்தில் அவள் முன் போய் நின்றான். அவனைக் கண்டு கனகாங்கி திடுக்கிட்டு பயந்து போனாள். மாயேந்திரனோ "பயப்படாதே! நான் உன்னை மணக்க விரும்பியே இங்கு வந்திருக்கிறேன்" எனத் தன்னைப் பற்றி அவளிடம் விவரமாகக் கூறினான்.



அவன் கூறியதை கவனமாகக் கேட்ட பின் கனகாங்கி "நானோ அரசகுமாரி. அரசகுமாரன் ஒருவனைத்தான் மணப்பேனே ஒழிய உன் போன்ற மந்திரவாதியை ஒரு போதும் மணக்க மாட்டேன்" என்றாள். மாயேந்திரன் பலமாகச் சிரித்து "பெண்ணே! என் சக்தியை நீ அறியாமல் இப்படிக் கூறுகிறாய். உன்னை இந்த அரண்மனையோடு வேறு இடத்திற்கு எடுத்துச் செல்ல என்னால் முடியும். நீ என்னை மணந்து கொண்டால் சுகமாக வாழலாம். நீ மட்டும் என்னை மணக்க மறுத்தால் இந்த நாட்டையே நான் பாழாக்கி விடுவேன்" என்று உறுமினான்.

மந்திரவாதி கூறியது கேட்டு கனகாங்கி பயந்து போனாள். அவன் அவ்வாறு செய்யக் கூடியவனே என எண்ணி அவள் சற்று யோசித்து "சரி. ஆனால் மூன்று நிபந்தனைகளின் பேரில் நான் உன்னை மணந்து கொள்ளத் தயார். இவற்றிற்கு நீ ஒப்பாவிட்டால் நான் தற்கொலை செய்து கொண்டு இறந்து விடுவேன்" என்றான்.

அதைக் கேட்ட மாயேந்திரன் தன் மனதில் "இவள் என்னைத் தானாக விரும்பி மணந்தாலே நான் பூவுலகில் ஏகச் சக்கராதிபதியாக விளங்க முடியும். இவளைக் கட்டாயப்படுத்தினால் எனக்கு அப்பதவி கிடைக்காது. எனவே இவள் போக்கிலேயே போகவிட்டுத்தான் பிடிக்க வேண்டும்" என நினைத்துக் கொண்டான்.

மாயேந்திரனும் "உன் நிபந்தனைகள் என்ன?" என்று கேட்கவே அவளும் "இந்த நாட்டு மக்கள் இரு மதங்களைச் சேர்ந்தவர்கள். இவர்களிடையே அடிக்கடிக் கலவரங்கள் மூள்கின்றன. ஒவ்வொருவரும் தன் மதமே உயர்ந்தது மற்றது தாழ்ந்தது என நினைக்கிறார்கள். இதனால் பொருள் சேதம், உயிரிழப்பு, வீணாகக் காலம் கழிதல் என ஏற்பட்டு வருகிறது. இவர்கள் சண்டை சச்சரவு இல்லாமல் ஒற்றுமையாக வாழச் செய்ய வேண்டும் என்பது என் முதல் நிபந்தனை" என்றாள்.

மாயேந்திரனும் "சரி, உன்



அடுத்த நிபந்தனை என்ன?" என்று கேட்கவே கனகாங்கியும் "என் தந்தை மக்களின் நலனுக்காகப் பல சட்ட திட்டங்களை வகுத்து அவற்றை அமல்படுத்தப் பல அதிகாரிகளை நியமித்துள்ளார். இந்த அதிகாரிகளில் சிலர் லஞ்சம் வாங்குவதில்தான் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். இவர்கள் யார் என்று என் தந்தையால் கண்டுபிடிக்க முடியவில்லை. நீ அவர்களை கண்டுபிடித்து அவர்களது போக்கைத் திருத்த வேண்டும். இது என் இரண்டாவது நிபந்தனை" என்றாள்.

அடுத்த நிபந்தனையை கனகாங்கி கூறலானாள். "அங்க நாட்டு இளவரசன் மிகவும் கொடியவன். அவன் என்னை மணக்க விரும்புகிறான். அவனால் என்னை மணக்க முடியாது போனால் இந்த நாட்டையே பாழாக்கப் போவதாகக் கருவிக் கொண்டிருக்கிறான். இதனால் நான் என் மனம் விரும்பும் மாளவ இளவரசனை மறக்க முயன்று கொண்டிருக்கிறேன். நீ அங்க நாட்டு இளவரசனின் கொடிய குணம் போக்கி அவனை நல்லவனாக்க வேண்டும். இது என் மூன்றாவது நிபந்தனை" என்றாள்.

இதைக் கேட்ட மாயேந்திரன் திடுக்கிட்டான். அவன் "நீயோ மாளவ இளவரசனை விரும்புவதாக கூறுகிறாய். இந்நிலையில் நீ யாக இஷ்டப்பட்டா என்னை மணக்கப் போகிறாய்?" என்று கேட்டான். கனகாங்கியும் "நான் நாட்டின் நலனைக் கருதி கொடியவனான அங்க நாட்டு இளவரசனைக்கூட மணந்து கொள்ளத் தயாராக உள்ளேன். நான் கூறிய இந்த நற்செயல்களை நீ செய்து முடித்தால் உன்னை ஏன் மணந்து கொள்ள மாட்டேன்?" என்றாள்.

மாயேந்திரன் "சரி. இப்போது போய் விட்டு பிறகு வருகிறேன். நீ அதற்குள் யாரையாவது மணந்து கொண்டுவிடக் கூடாது. அதற்காக ஒரு மாலையை உன் கழுத்தில் போடுகிறேன். நீ இதனைக் கழற்றவும் முடியாது. உன்னை யாராவது தொட்டாலும் இது பாம்பாக மாறி



அவனைத் தீண்டிவிடும்'' எனக் கூறி ஒரு மாலையை கனகாங்கியின் கழுத்தில் போட்டுவிட்டு மாயமாய் மறைந்து போனான்.

மாயேந்திரன் தன் பூஜையறைக் குச் சென்று அங்கு எல்லா துஷ்ட தேவதைகளையும் ஆராதித்தான். அவை அவன் முன் தோன்றவே அவன் தன் விருப்பத்தைத் தெரி வித்தான். அத்தேவதைகளும் "இது வரை யாரும் எங்களிடம் இம்மாதி ரிக் கேட்டது இல்லை. எங்கள் சக்தி கள் அனைத்தையும் உனக்கு கொடுக் கிறோம். ஆனால் உன் இந்த விருப் பம் நிறைவேற நீ அன்பு தேவதையை வழிபட்டாக வேண்டும். பலத்தை வெல்ல எங்கள் சக்தி பயன்படும். ஆனால் மனதை வெல்ல அன்பே தேவை'' என்றன.

மாயேந்திரன் அத்தேவதைகள் கூறியது பற்றி யோசித்தான். தான் அதுவரை செய்த செயல்கள் எல் லாம் கொடூரமானவை. இப்போது முற்றிலும் மாறான வழியில் போக வேண்டும். ஆனாலும் பரவா யில்லை. அன்பு தேவதையை வழி படத்தான் வேண்டும்.

மாயேந்திரன் உடனேயே அன் புத் தேவதையை வழிபடலானான். அன்பு தேவதையும் அவன் முன் தோன்றி "அன்பு இருந்தாலே உன் எண்ணம் நிறைவேறும். நீயோ கொடிய செயல்கள் புரிபவன். சுயநலக்காரன். உன் மனம் பிறரி டம் அன்பு காட்ட நீண்ட நாட்கள் பிடிக்கும். அப்படிக் காத்திருக்க நீ சம்மதித்தால் நான் உனக்கு உதவி புரிகிறேன்'' என்றது. மாயேந்திர னும் அது கூறியதை ஏற்றான்.

மாயேந்திரன் முதலில் நாட்டு மக்களிடையே சென்று தான் தெய் வீகச் சக்தி படைத்தவன் எனக் கூறிப் பல அதிசயச் செயல்களைப் புரிந்து காட்டினான். அவற்றைக் கண்ட மக்கள் அவன் ஒரு மகான் எனக் கருதி வணங்கலாயினர். அவனும் பல நன்மைகளை அவர் களுக்குச் செய்தான். கண்ணில்லாத வர்களுக்குப் பார்வை கிடைக்கச் செய்தான். ஊமைகளைப் பேச வைத்தான். ஏழைகளுக்குப் பணம் கிடைக்கச் செய்தான். விளைச்சல்

காணாத வயல்களில் பயிர் வளரச் செய்தான்.

மாயேந்திரன் கடவுள் பற்றி போதித்து கடவுள் ஒருவரே என்றும் அவரை வழிபட நாம் மதங்களை ஏற்படுத்திக் கொண்டோம் என்று விளக்கினான். உலகில் யாவரும் சகோதரர்களே என்றும் மதத்தின் பெயரால் ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது என அவன் மக்களுக்கு எடுத்துக் கூறினான். அவனது உபதேசங் களைக் கேட்டு மக்கள் மனம் கொஞ் சம் கொஞ்சமாக மாறத் தொடங்கியது. கலிங்க நாட்டில் மதவெறி என்பது இல்லாது போயிற்று.



மாயேந்திரனைப் பின்பற்றியவர்கள் ஊழல்கள் புரியாமல் நேர்மையுடன் நடக்கலானார்கள். அரசாங்க ஊழியர்கள் எல்லாம் அவனது உபதேசங்களைக் கேட்டு மனம் மாறி நல்லவர்களாக ஆகிவிட்டார்கள்.

மாயேந்திரனின் புகழ் பல நாடுகளிலும் பரவியது. அங்க நாட்டு இளவரசன் கூட மாயேந்திரனின் பக்தனாகி விட்டான். அவனது கொடிய குணங்கள் ஒழிந்தன. அவனும் நல்லவனாகி விட்டான். இவை எல்லாம் மாயேந்திரன் எதிர் பார்த்ததைவிட வெகு விரைவில் நடந்து விடவே அவனும் கனகாங்கியைக் காணச் சென்றான்.

அவனைக் கண்டதுமே கனகாங்கி அவனது கால்களில் விழுந்து வணங்கி "நீங்கள் மந்திரவாதியல்ல. கடவுளே. எனக்காக நீங்கள் செயற்கரிய செயல்களை எல்லாம் செய்திருக்கிறீர்கள். எனவே நான் உங்களை மணந்து கொள்வது எனக்கு மாபெரும் அதிர்ஷ்டமேயாகும்" என்றாள்.

மாயேந்திரனும் "நான் இப்போது உன்னை மணக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு வரவில்லை. உன் கழுத்தில் நான் போட்ட மாலையை எடுத்து விட்டு நீ உன் இஷ்டப் பட்டவரை மணக்கலாம் எனச் சொல்லிப் போகவே வந்தேன்" என்றான். அதுகேட்டு கனகாங்கி ஆச்சரியப்பட்டு "அப்படியானால் நீங்கள் என்னை நேசிக்கவில்லையா?" என்று கேட்டாள்.

மாயேந்திரனும் "நான் மந்திர வாதியாக மட்டும் இருந்தபோது உன்னை மணக்க விரும்பினேன். இப்போது நான் தெய்வாம்சம் கொண்டவன். அதனால் உன்னை அடைய விருப்பம் இல்லை. நீ யாரை மணக்க வேண்டும் என முன்பு விரும்பினாயோ அதுதான் நடக்க வேண்டும். நீ மாளவ நாட்டு இளவரசனை மணந்து கொண்டு சுகமாக வாழ்" எனக் கூறி அவள் கழுத்திலிருந்து மாலையை எடுத்துக் கொண்டு அங்கிருந்து சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! மாயேந்திரன் கனகாங்கியை மணக்க எவ்வளவோ முயற்சிகளைச் செய்தான். இது உலகை ஆள ஏகச்சக்கிராதிபதியாகும் எண்ணத்தில்தானே. அது கைகூடும் நிலை ஏற்பட்டபோது ஏன் அவன் அதை வேண்டாமென கைவிட்டு விட்டான்? இக்கேள்விக்கு சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "ஆரம்பத்தில் மாயேந்திரன் பதவி மோகமும் அதிகார ஆசையும் கொண்டிருந்தான். ஆனால் அவன் அன்பு வழியை மேற்கொண்டதும் அவனது சுயநலமும் மமதையும் அவனை விட்டு ஒழிந்தன. அவன் எல்லோருடைய உணர்ச்சிகளையும் புரிந்து கொண்டான். எனவே கனகாங்கியின் விருப்பப்படியே அவன் நடந்து விடுவதே சரி என நினைத்தான். எல்லோரிடமும் அன்பு கொண்டதால் அவனது அதிகார ஆசையும் மறைந்து போயிற்று. எனவே அவன் ஏகச் சக்கராதிபதியாகவில்லை" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—46




**நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:**

## கருப்பு மான்

நம் நாட்டில் நான்கு வகை மான்கள் உள்ளன. சின்கரா, கருப்பு மான் (ப்ளாக் பக்), சௌசிங்கா என்ற நான்கு கொம்பு மான், நீல்காய் என்ற நீலநிற மான். இந்த நான்கு வகை மான்களில் மிகவும் அழகானது கருப்பு மானே. இதன் உடல் கருநிறமாய் ஆங்காங்கு வெள்ளைநிறப் புள்ளிகளோடு இருக்கும். இவ்வகை ஆண் மான்களின் கொம்புகள் திருகல்கள் கொண்டவை. சுமார் 80 செ.மீ. உயரமான இது 40 கிலோ எடையுள்ளது. இவற்றின் பார்வை மிகக் கூரானது. ஆனால் கேட்கும் சக்தி சற்றுக் குறைவே.

ஒரு காலத்தில் நம் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் தென்பட்ட இவை தற்போது குஜராத், ராஜஸ்தான், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் மட்டுமே காணக் கிடைக்கின்றன. தென்னிந்தியாவில் சென்னையிலுள்ள கிண்டி தேசிய பூங்காவில் இவை பாதுகாக்கப்பட்டு வருகின்றன. 1924-ல் அப்போதைய கவர்னர் இவற்றை அங்கு கொண்டு வந்தார். இவை துள்ளிக் குதித்து ஓடுவதைக் காண வேடிக்கையாக இருக்கும்.

# கதை கூறுவதில் சிறந்தவன்!



சென்னையில் ஒரு பிரபல பத்திரிகை நிறுவனம் அண்மையில் சிறுவர் சிறுமியருக்கு நடத்திய கதை கூறும் போட்டியில் 900 சிறுவர் சிறுமியர் கலந்து கொண்டார்கள். முதலாவது சுற்றில் இவர்களில் 50 பேர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அவர்களில் 13 பேர்கள் நன்றாகக் கதை கூறுகிறார்கள் எனத் தீர்மானித்துப் பரிசளித்தார்கள். அவ்வாறு பரிசு பெற்றவர்களில் ஐந்து வயதுச் சிறுவனான தீபக்கும் ஒருவன். இவன் நரம்புத் தளர்ச்சியால் பாதிக்கப்பட்டவன்.

உடல் நரம்புகள் வலுவற்றுப் போனதால் சரியாகப் பேச முடியாத இவன் தன் குடும்பப் பெரியவர்களிடமிருந்து தென்னாலிராமன் கதைகளையும் பீர்பல் கதைகளையும் கேட்டுச் சொல்லப் பழகிக் கொண்டு மிக நேர்த்தியாக அவற்றைப் போட்டியில் கூறினான்.

நரம்புத் தளர்ச்சி பேணும் சங்கம் நடத்தும் சிறப்புப் பள்ளி ஒன்று சென்னையில் உள்ளது. இதில் பயிலும் மாணவர்களில் தீபக் மிகவும் சூட்டிகையானவன் எனக் கருதுகிறார்கள். தீபக் தினந்தோறும் இப்பள்ளிக்குச் சென்று கல்வி பயின்று வருகிறான். இவன் எப்போதும் சிரித்த முகமாய் தனக்குள்ள குறை பற்றிச் சற்றும் கவலைப் படாதவனாய் இருக்கிறான்.

தீபக் தன் வீட்டில் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை காண்பதில் ஆர்வம் காட்டுகிறான். குறிப்பாகத் திரைப்படப் பாடல்கள் கொண்ட நிகழ்ச்சிகளைப் பெரிதும் விரும்பிப் பார்க்கிறான். ஒவ்வொரு வாரமும் ஒளிபரப்பப்படும் 'இவ்வாரச் செய்திகள்' நிகழ்ச்சியைத் தவறாமல் காண்கிறான். அதுபற்றி அவன் பிறரிடமும் கூறி மகிழ்கிறான். தன் வீட்டிற்கு வரும் உறவினர்களின் பெயர்கள், அவர்களது முகவரி, அவர்களது தொலைபேசி எண் ஆகியவற்றை எல்லாம் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறான்.

இவனுக்கு கிரிக்கெட், டென்னிஸ், கால்பந்து ஆகிய விளையாட்டுகள் மிகவும் பிடிக்கும். கபில்தேவின் பரம ரசிகன் இவன். குறுகுறுவென்ற பார்வையோடும் புன்னகை முகத்தோடும் விளங்கும் இச்சிறுவனால் தன் கையால் எழுத முடியாமல் இருப்பது துரதிருஷ்டவசமேயாகும். எழுத மட்டும் முடிந்தால் அழகிய நல்ல கதைகளை எழுதும் ஆற்றலும் பெற்றுவிடக் கூடியவனே என்பதில் சந்தேகமே இல்லை.

# உங்களுக்குத் தெரியுமா?

1. முதன்முதலாக இலக்கிய மன்றம் எங்கு நடைபெற்றது?
2. ஹிந்தி மொழியில் முதலில் இராமயணத்தை எழுதியவர் யார்?
3. கல்கத்தாவின் பொடானிகல் கார்டன்ஸின் சிறப்புத் தன்மை என்ன?
4. ஒரு பாரசீகக் கதையில் தந்தையும் மகனும் தம் உறவை அறியாமல் போரிட்டதாகக் கூறப்பட்டது. அக்கதையின் பெயர் என்ன?
5. நம் ஒன்பதாவது நாடாளுமன்றத் தேர்தலில் உள்ள ஒரு சிறப்புத் தன்மை என்ன?
6. ஜவாஹர்லால் நேரு எவ்வளவு முறை இந்திய தேசிய காங்கிரசின் தலைவராக இருந்திருக்கிறார்?
7. ஆங்கில மொழியைப் போல 26 எழுத்துக்களே கொண்ட வேறு இரு ஐரோப்பிய மொழிகள் யாவை?
8. போலோ விளையாட்டு விளையாடியவாறே இறந்துபோன டில்லி சுல்தான் யார்?
9. ராஜா ரஞ்சித் சிங்கின் பிரியமான குதிரை எது?
10. கங்கை, யமுனை சேரும் கும்பமேளா போலத் தொடர்பு கொண்ட மற்ற நதிகள் யாவை?
11. சீக்கிய மத குருமார்களில் இருவரின் பிறந்த நாள் விழாவை விமரிசையாகக் கொண்டாடு கிறார்கள். அந்த இருவர் யார்?
12. காளைச் சண்டையில் வெற்றி (மடாடார்) வீரனுக்கு அளிக்கப்படும் மிக உயரிய பரிசு என்ன?
13. பெங்களூரிலுள்ள சரஸ்வதி அருங்காட்சியகத்தின் சிறப்பு என்ன?
14. இந்தியாவின் முதலாவது ஆர்ச் பிஷப் யார்?

## விடைகள்

1. மதுரை, தமிழ் சங்கம்.
2. துளசிதாஸ்.
3. ஆசியாவில் மிகப் பெரியது.
4. சோஹரப்-ருஸ்தம்.
5. ஓட்டுரிமை வயது 18க்கு குறைக்கப் பட்டது. நாடாளுமன்றத்தில் எக்கட்சிக்கும் பெரும்பான்மை இருக்கவில்லை.
6. ஏழுமுறை.
7. ஜெர்மன், டச்.
8. குதுப்புத்தீன் ஐபக்.
9. லாய்லி.
10. நர்மதை, காவேரி, கோதாவரி.
11. குருநானக் தேவ், குருகோவிந்த சிங்.
12. அக்காளையின் இரு காதுகளும், வாலும்.
13. பெண்களைப் பற்றி நம் நாட்டில் அமைந்த முதல் அருங்காட்சியகம்.
14. பிஷப் ஜுசாஸ் டி அல்டாக்ஸ்வெர்க்

# அம்புலிமாமா செய்திகள்

## மிக உயர்ந்த விலை

மிக அரிதான தபால் தலைகள் மிக உயர்ந்த விலைக்குப் போகின்றன. இங்கிலாந்து மன்னர் ஏழாவது எட்வர்டின் தலை உருவம் பதித்த ஒரு தபால் தலை 56,000 அமெரிக்க டாலர்களுக்கு விலை போயிற்று. இது 1904ல் வெளியிடப் பட்ட தபால் தலை. நீலநிற இத்தபால் தலையை சுவிட்ஸர்லாந்தைச் சேர்ந்த ஒருவர் வாங்கினாராம்.






## நீண்டகாலம் எரியும் 'பல்பு'

கலிபோர்னியாவைச் சேர்ந்த ஒரு நிறுவனம் பல ஆண்டுகள் பரிசோதனை செய்து 20,000 மணி நேரம் எரியக்கூடிய மின்சார பல்பு ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறது. எலக்ட்ரானிக்-இ-லாம்ப் எனப்படும் இந்த பல்பு தினமும் மூன்று ம்ணி நேரம் எரிவதாக வைத்துக் கொண்டால் 18 வருடங்களுக்கு எரியக் கூடியதாம்.

## சூயஸ் கால்வாய்

மத்திய தரைக் கடலையும் செங்கடலையும் இணைக்கும் சூயஸ் கால்வாயின் ஆழம் 18 மீட்டர்கள். இந்த ஆழத்தை 22 மீட்டர்களாக ஆக்கி பெரிய கப்பல்கள் போக வசதி செய்து கொண்டிருக்கிறார்கள். இதனால் தற்போது தென்னாப்பிரிக்க முனையைச் சுற்றிக் கொண்டு செல்லும் பல பெரிய கப்பல்கள் இக்கால்வாய வழியாகச் செல்ல முடியும். இதனால் உலகின் மொத்த வியாபாரத்தில் 30 சதம் இக்கால் வாயின் வழியாக நடைபெறும் என்று மதிப் பிடுகிறார்கள்.






# இப்படியா இவர்!

சிவபுரத்தில் புதிதாக ஆசிரியர் வேலையை சிங்காரவேலன் ஏற்றுக் கொண்டான். அவ்வூர் அவனுக்கு முற்றிலும் புதிது. அங்கு வந்ததும் பள்ளியை நடத்தும் ஜமீன்தாரரைக் கண்டு அவன் தன்னைத் தானே அறிமுகம் செய்து கொண்டான். அவரும் அவன் தங்க வீட்டைக் கொடுத்து மற்ற வசதிகளையும் அளித்தார். அப்போது ஜமீன்தாரர் அதிகம் பேசாதவர் என்றும் எல்லோரையும் விடுத்துக் தனித்து இருப்பவர் என்றும் சிங்காரவேலன் கண்டு கொண்டான்.

அவன் அந்த ஊருக்கு வந்த இரண்டாவது நாளிலே விநாயக சதுர்த்தியும் வந்தது. ஆனால் அன்று காலையில் மழை பலமாகப் பெய்தது. அது சற்று ஓய்ந்ததும் ஊர்க்காரர்கள் பிள்ளையார் பூசைக்கான பொருள்களை வாங்க தம் வீடுகளிலிருந்து வெளியே வந்தார்கள்.

கடைத் தெருவில் களிமண் பிள்ளையார் பொம்மைகளும், குடை, மலர், எருக்க மாலை போன்றவைகளும் இருந்தன. கடைகளில் சிறுவர்களும் பெரியவர்களும் உரக்கக் கத்தி அங்கு வருவோரைத் தம் கடைக்கு வரும்படி அழைத்துக் கொண்டிருந்தார்கள். சிங்காரவேலனும் அப்போது கடைத் தெருவிற்குச் சென்றான்.

அப்போது ஜமீன்தாரர் குடையை பிடித்துக் கொண்டு வந்தார். அவர் ஒவ்வொரு கடையிலும் நின்று பேரம் பேசி கடைக்காரர் சொன்ன விலைக்கு மிகக் குறைவான விலைக்கு பூ, பழம், எருக்க மாலை, பிள்ளையார் பொம்மைகள் என்று வாங்கிக் கொண்டு போனார். அவர் அநேகமாக எல்லாக் கடைகளிலும் இருந்த பொருள்

—எஸ். சோபினி—



களை ஒன்றுக்கு அரையாக பேரம் பேசி வாங்கிக் கொண்டு போய் விட்டார்.

இதைக்கண்ட சிங்காரவேலன் "இதென்ன அநியாயம்! சிறுவன் கிழவன் என்றுகூடப் பாராமல் இப்படி ஒரேயடியாக விலையைக் குறைத்து இந்த ஜமீன்தாரர் எல்லா வற்றையும் வாங்கிக் கொண்டு போய்விட்டாரே. இவற்றை அதிக விலைக்கு யாருக்கோ விற்கப் போகிறார். இதில் சந்தேகமே இல்லை. என்ன மனிதர் இவர்!" என்று எண்ணி அவர் மீது கொஞ் சம் கோபமும் கொண்டான்.

அப்போது அவனுடன் வேலை செய்யும் மற்றொரு ஆசிரியரான மணியன் வரவே அவனிடம் சிங்கார வேலன் அவரது போக்கைப் பற்றிக் கூறி "பாவம்! இவர்கள் எல்லாம் ஜமீன்தாரருக்கு பயந்து அரை விலைக்கும் கால் விலைக்கும் தம் பொருள்களை விற்று விட்டார் கள். இந்த ஜமீன்தாரர் இவ்வளவு ஈவு இரக்கம் இல்லாதவரா? பாவம் இவர்கள் மழையில் நனைந்து தெருக் களில் நின்று தம் பொருள்களை விற்று நாலு காசு சம்பாதித்துத் தம் வயிற்றை நிரப்பிக் கொள்பவர் கள். மாடமாளிகையில் சுகபோகத் துடன் வாழும் ஜமீன்தாரருக்கு இவர்களது கஷ்ட நஷ்டங்கள் பற்றி என்ன தெரியப் போகிறது?" என்று பொரிந்து தள்ளினான்.

சிங்காரவேலன் கூறியதை எல் லாம் கேட்டபின் மணியன் "ஜமீன் தாரரைப் பற்றி இப்படிக் கேவல மாகப் பேசாதீர்கள். அவரைப் போன்ற தங்கமான மனிதரைக் காணவே முடியாது. நீங்கள் புதிதாக வந்திருக்கிறீர்கள். அதனால்தான் அவரைப் பற்றி நீங்கள் சரியாக அறிந்து கொள்ளவில்லை" என்றான்.

அப்போது சிங்காரவேலன் "ஆமாம் தங்கமான மனிதர் இப் படித்தான் இருப்பார் என்பது எனக் குத் தெரியாது தான்" என்றான் குத்தலாக. அப்போது மணியன் "நாம் இப்படிப் பேசிக்கொண்டிருப் பதில் எவ்விதப் பயனும் இல்லை. வாருங்கள் ஜமீன்தாரர் வீட்டிற் குப் போவோம். நீங்கள் நேரில்

கண்டு திருப்தி அடையுங்கள்'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு ஜமீன்தாரரின் வீட்டிற் குச் சென்றான்.

சிங்கார வேலனின் ஆத்திரம் அடங்கவில்லை. ஜமீன்தாரரைக் கண்டதும் அவர் வெட்கித் தலை குனியும்படி நான்கு கேள்விகளைக் கேட்பது என்று எண்ணிக் கொண் டான். அதனால் அவனது நண்பன் கூறிய சமாதானத்தை ஏற்கவில்லை.

அவர்கள் ஜமீங்தாரரின் வீட்டை அடைந்தபோது ஜமீன்தாரர் சற்று முன் வாங்கிய பொருள்கள் எல் லாம் தனித்தனியாகக் குவித்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார் கள். ஜமீன்தாரரும் அங்கே நின்று கொண்டிருந்தார். அவர் இரு ஆசிரி யர்களை கண்டதும் அன்புடன் வரவேற்று ''எதிர்பாராதவிதமாக பூஜைக்கு வந்திருக்கிறீர்கள் இப்படி உட்காருங்கள்'' என்று கூறி அவர் களை இரு நாற்காலிகளில் உட் காரச் சொன்னார். பிறகு அவர் ''மழையில் நனைந்து விட்டீர்கள். உங்கள் ஆடைகளும் நனைந்து விட் டன. இந்தப் புத்தாடைகளை உடுத் திக் கொள்ளுங்கள்'' எனக் கூறி புத்தாடைகளைக் கொடுத்தார்.

அவர்கள் இருவரும் அவற்றை உடுத்திக் கொண்டு வந்ததும் பணி யாட்கள் அவர்களுக்குக் குடிக்கச் சூடான பாலைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். இப்படி அவர் உப



சரித்தது கண்டு சிங்கார வேலன் மலைத்துப்போனான்.

சற்று நேரத்திற்குப் பின் அவன் ஜமீன்தாரரிடம் ''ஐயா! என் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளத் தங்களிடம் ஒரு கேள்வி கேட்க லாமா?'' என்று பணிவுடன் கேட் டான். ஜமீன்தாரரும் '' ஆகா! தாரள மாகக் கேளுங்கள்'' என்றார்.

அப்போது சிங்கார வேலன் அவர் அன்று காலையில் பேரம் செய்த விதத்தைத் தான் கண்ட தாகக் கூறி ''எங்களை இப்படி உப சரித்த தாங்களா அந்த வியாபாரி களிடம் ஒன்றுக்குப் பாதியாக விலையைக் குறைத்து வாங்கின வர் என்று நினைக்க ஆச்சரியமாக இருக்கிறது'' என்றான்.

அதுகேட்டு ஜமீன்தாரர் பலமாக சிரித்து "அவர்கள் எவ்வளவோ சிரமப்பட்டு அப்பொருள்களைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அப் பொருள்களை எல்லாம் இன்று விற்றால்தான் உண்டு. நாளைக்கு அவற்றை யாரும் வாங்க மாட்டார் கள். அவை நாளைவரை இருந் தால் வீணாகியும் விடும். எனவே இன்று அவர்கள் அவற்றின் அடக்க விலைக்கு மேலாக உயர்த்தியே கூறுவது வழக்கம். நான் அவர் களுக்கு நஷ்டம் ஏற்படக்கூடாது என்பதற்காகவும் இன்றே அவர் கள் கொண்டு வந்த பொருள்கள் விலை போய் விட வேண்டும் என்ப தற்காகவும் அவர்களுக்குக் கட்டு படி யாகும் விலைக்கு பேரம் பேசி வாங்கினேன். அவர்களும் நான் கேட்டது சரியான விலையே என உணர்ந்து எனக்கு விற்றார்கள். இப்படி பேரம் செய்வது உலக வழக்கு. நான் கேட்ட விலை சரி யான விலை. அதனால் தான் அவர் கள் கொடுத்தார்களேயொழிய நான் இப்பகுதி ஜமீன்தாரர் என்ற பயத் தில் அல்ல. இவற்றை வாங்கி நான் என்ன செய்வேன் என்பதும் அவர் களுக்குத் தெரியும்" என்றார்.

சிங்காரவேலனும் "அது பற்றித் தான் நானும் நினைத்தேன். வேறு யாருக்காவது அதில் பெரும்பகு தியை விற்று விடுவீர்களா?" என்று கேட்டான். ஜமீன்தாரரோ "இல்லை இவற்றை எல்லாம் என்னிடம் வேலை செய்பவர்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் தானமாகக் கொடுத்து விடுவேன். எல்லோரும் பிள்ளையாரை மன நிறைவுடன் இன்று வழிபட வேண்டும் என்பதே என் விருப்பம்" என்றார்.

அது கேட்டு சிங்காரவேலன் அவரை கையெடுத்துக் கும்பிட்டு "நான் தங்களை முதலில் தவறாக எண்ணிவிட்டேன். பலாப்பழத் துள் இனிய சுளைகள் இருப்பது போன்ற குணம் படைத்தவர் தாங் கள்" எனக்கூறி மகிழ்ந்து நின்றான்.





# மாறி விட்டான்!

ரஹீம் என்ற பணக்காரரின் மகள் ரஜியா. அவள் அழகானவள். ரஹீம் ஆண்டவனிடம் அசையாத நம்பிக்கை கொண்டவர். தினமும் ஐந்து வேளைகளில் நமாஸ் ஓது வார். பயபக்தியுடன் தினமும் குரானைப் படிப்பார்.

ரஜியாவுக்குத் திருமண வயது வந்ததும் எவ்வளவோ பணக்காரர்கள் அவளைத் தம் வீட்டு மருமகளாக்கிக் கொள்ள முன் வந்தார்கள். ஆனால் ரஹீமோ "நான் பணத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. என் மகளுக்குக் கணவனாக வரப் போகும் வாலிபன் அல்லாவின் மீது அசையாத நம்பிக்கை கொண்டவனாக இருக்க வேண்டும். அவன் பணக்காரனாகத்தான் இருக்க வேண்டும் என்பது இல்லை. ஏழையாக இருந்தாலும் பரவா யில்லை" எனத் தம் மனதில் தீர்மானித்துக் கொண்டார்.

ஒரு நாளிரவு ரஹீமின் மனைவி அவரிடம் "நம் ரஜியாவின் திருமணம் பற்றிக் கவலை வேண்டாமா? வந்த சம்மந்தங்களை எல்லாம் ஒதுக்கிக்கொண்டே வருகிறீர்களே இப்படியே போனால் அவள் திருமணம் எப்படி நடக்கும்?" என்று கேட்டாள்.

ரஹீமும் "நமக்குப் பணக்கார வீட்டுப்பிள்ளைதான் மாப்பிள்ளையாக வரவேண்டும் என்பது இல்லை. ஏனென்றால் ஆண்டவன் அருளால் நம்மிடம் போதிய பணம் இருக்கிறது. ஏழையாக இருந்தாலும் அறிவாளியாய் ஆண்டவனிடம் ஆழந்த நம்பிக்கை கொண்டவனாக இருப்பவன் கிடைத்தால் போதும். அப்படிப்பட்டவன் கிடைப்பானா என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன். நமக்கு வந்த பணக்

—அராபிய நாட்டுப் பழங்கதை—



கார இடத்துப் பையன்கள் எல்லாம் ஊதாரிகள். கடவுள் மீது நம்பிக்கை இல்லாதவர்கள்'' என்றார்.

இப்படியாக அவரும் அவர் மனைவியும் பேசியதை அன்றிரவு அங்கு திருட வந்த நசீர் என்ற வாலிபன் கேட்டுவிட்டான். அப்போது அவன் "அப்படியானால் நான் அல்லாவிடம் அளவு கடந்த விசுவாசம் கொண்டவன் போல நடித்து இவரது மகளை மணந்து கொண்டு இவரது சொத்தையும் அடைந்து விடுகிறேன்'' என்று தீர்மானித்துக் கொண்டான்.

மறுநாள் முதல் ரஹீம் மசூதிக்கு நமாஸ் ஓதச் செல்லும் போதெல்லாம் அவருக்கும் முன்பாக நசீர் அந்த மசூதிக்குள் போய் அமர்ந்து நமாஸ் ஓதுபவன் போல் நடிக்கலானான். இரண்டு மூன்று நாட்களாகத் தொடர்ந்து அவனைப் பார்த்த ரஹீம் "ஆகா! இவனுக்குத் தான் அல்லாவின் மீது எவ்வளவு நம்பிக்கை! தினமும் ஐந்து வேளைகளிலும் நமாஸ் ஓதுகிறான். பையன் பார்க்க அழகாகவும் இருக்கிறான். இவனை நம் ரஜியாவுக்குத் திருமணம் செய்து வைக்கலாம். இவனைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்கிறேன்'' என எண்ணினார்.

நான்காவது நாள் அவர் அவனைக் கூப்பிட்டு விசாரிக்கவே அவனும் "நான் பரம ஏழை. அல்லாவிடம் அசையாத நம்பிக்கை கொண்டவன். தினமும் வேளை தவறாமல் நமாஸ் ஓதி மனநிறைவு கொள்கிறேன். இங்கே மசூதியில் ஒரு ஓரத்தில் முடங்கிக் கிடக்கிறேன். தினமும் யாராவது ஒருவர் எனக்கு உணவு கொடுத்து விடுகிறார்கள்'' என்றான்.

அது கேட்டு ரஹீம் மகிழ்ந்து "உனக்கு தினமும் நான் உணவு கொடுக்கிறேன். இவ்வளவு சிறு வயதில் நீ அல்லாவின் மீது கொண்டுள்ள நம்பிக்கையைக் கண்டு உன்னைப் பாராட்டுகிறேன்'' என்றார். அவனே தன் மகளை மணக்கத் தக்கவன் எனவும் அவர் தம் மனதில் முடிவு செய்து கொண்டார். அன்று முதல் நசீருக்கு நல்ல

உணவு ரஹீமின் வீட்டிலிருந்து கிடைக்கலாயிற்று.

இப்படியே ஒரு மாதம் கழிந்தது. நசீர் உண்மையிலேயே அல்லாவின் பக்தனாகி விட்டான். மசூதியில் இருந்து நமாஸ் ஓதி அங்கு முல்லாக்கள் கூறும் நல்லுரைகளைக் கேட்கக் கேட்க அவன் மனம் மாறி நல்வழியில் திரும்பிவிட்டது. ஒரு நாள் ரஹீம் அவனிடம் "உன்னை எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. உன் போன்ற ஒருவனுக்குத்தான் என் மகளைத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என் மகளை நீ மணந்து கொள்" என்றார்.

நசீரோ "ஐயா! நான் உங்களுக்கு ஏற்றவன் அல்ல. நான் திருடனாக இருந்தவன். ஒரு நாளிரவு நீங்களும் உங்கள் மனைவியும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுவிட்டு அல்லாவின் பக்தன் போல நடித்து உங்களை ஏமாற்றி உங்கள் மகளை மணந்து கொண்டு உங்கள் சொத்தை அடைய நினைத்தேன். ஆனால் இப்போது உண்மையிலேயே அல்லாவிடம் பக்தி கொண்டு விட்டேன். எனக்குப் பணம் வேண்டாம். நான் உண்மையிலேயே அல்லா வின் அடிமை. எனவே உங்களை ஏமாற்றி பாவம் அடைய விரும்பவில்லை" என்றான்.

அப்போது ரஹீம் "நீ திருந்தி விட்டாய். பாவம் புரிந்தால் அல்லா தண்டிப்பார் என்று உணர்ந்து விட்டாய். அந்த அல்லாதான் உன்னை என்னிடம் அனுப்பி இருக்கிறார். நீ என் மகளை மணந்து கொண்டு அல்லாவிற்கு தொண்டு புரிந்து வா" என்று கூறி அவனுக்கே தம் மகளை மணம் செய்து வைத்தார். நசீர் ரஹீமின் எதிர்பார்ப்பின்படியே தான் ரஜியாவை மணந்து கொண்டு ஆண்டவனை அனு தினமும் தொழுது இனிது வாழ்ந்து வந்தான்.



# மயக்கும் பேச்சு

வீரய்யன் நான்கு பாதைகள் சேரும் இடத்தில் தன் செருப்புக் கடையை வைத்திருந்தான். ஆரம்பத்தில் பலர் வந்து அக்கடையில் செருப்புகளை வாங்கிக் கொண்டு போனார்கள். சிலருக்கு அவை பெரிதாயும் வேறு சிலருக்கு அவை சிறிதாயும் இருந்தன. அவர்கள் இவ்வாறு முணுமுணுத்துக் கொண்டே அவற்றை வாங்கிக் கொண்டு சென்றார்கள்.

இதைக் கண்ட வீரய்யன் இப்படியே போனால் தன் வியாபாரம் சரியாக நடக்காது என நினைத்தான். எனவே ஒரு நாள் செருப்பு வாங்க வந்த ஒருவன் ஒரு ஜோடி செருப்பை எடுத்துப் போட்டுப் பார்த்துவிட்டு "ஒரேயடியாகப் பிடிக்கிறதே" என்று கூறி அவை வேண்டாம் என்று சொல்லிவிட்டுக் கடையை விட்டுப் போகலானான்.

வீரய்யன் அவனைத் தடுத்து நிறுத்தி "தோல் செருப்புத்தானே. அதனால் சற்று இறுக்கமாகப் பிடிக்கும். நடக்க நடக்கத் தளர்ந்து சரியாகிவிடும்" என்று கூறி அவனைத் திருப்திப்படுத்தி அவற்றை அவனுக்கு விற்றான்.

சற்று நேரத்திற்குப் பின் ஒரு சிறுவனை அழைத்துக் கொண்டு ஒருவர் வந்தார். அச்சிறுவனின் காலுக்குச் செருப்பை எடுத்துப் போட்ட போது அது தளர்த்தியாக இருந்தது. அது வேண்டாம் எனக்கூறி அவர் கிளம்பவே வீரய்யன் அவரிடம் "இப்போது இது தளர்த்தியாக இருந்தாலும் பதினைந்து நாட்களுக்குப் பின் சரியாக இருக்கும். ஏனென்றால் பையன் வளர்பவனாயிற்றே. அப்போது அவன் கால்களும் பெரிதாகி விடும்" என்றான். அவரும் திருப்தி அடைந்து அச்செருப்புகளை வாங்கிக் கொண்டு போனார்.

இப்படித்தான் தன் சொல்வித்தையைக் காட்டி வீரய்யன் தன் வியாபாரத்தை நடத்தி வரலானான்.






வானரர்கள் ஈமொய்ப்பது போலக் கும்பகர்ணன் மீது விழுந்து தாக்கினார்கள். அவர்கள் கும்பகர்ணனைக் கடித்தும் பிராண்டியும் குத்தியும் பார்த்தார்கள். ஆனால் கும்பகர்ணன் சற்றும் கவலைப் படாமல் வானரப் படையை அழிக்கலானான். அவன் அவ்வாறு செய்வதைத் தடுக்க யாராலும் முடியவில்லை.

அங்கதனும் சுக்கிரீவனும் கும்பகர்ணன் மீது பாறாங்கற்களை எறிந்தனர். கும்பகர்ணனை அவை ஒன்றும் செய்யவில்லை. அவன் சுக்கிரீவன் மீது ஈட்டியை எறிந்தான். ஆனால் அனுமார் சட்டெனப் பாய்ந்து அந்த ஈட்டியைப் பிடித்து தூர எறிந்தார். அது கண்டு கும்பகர்ணன் ஒரு பாறையை எடுத்து சுக்கிரீவன் மீது எறிந்து அவனை நினைவிழந்து விழும்படிச் செய்தான்.

கீழே விழுந்த சுக்கிரீவனைக் கும்பகர்ணன் தூக்கிக் கொண்டு போனான். சுக்கிரீவன் இறந்து விட்டால் இராமரும், இலட்சுமணனும் எளிதில் தன்னிடம் சிக்கி விடுவார்கள் என அவன் நினைத்தான். எனவே அவன் சுக்கிரீவனோடு இலங்காபுரிக்குள் சென்றான்.

இதைக்கண்ட வானரர்கள் பயந்து போனார்கள். எதிரியிடம் தம் மன்னனே சிக்கிய பிறகு யார் தலைமையில் போரை நடத்துவது? மேலும் சுக்கிரீவனை எப்படி விடு

—இந்திரஜித்தனின் தாக்குதல்—



விப்பது? கும்பகர்ண்ன் பலமிக்க வன் என்பது தெரிந்து போயிற்று எனவே சுக்கிரீவனை அவனிட மிருந்து மீட்பது எளிதல்லவே என்று அவர்கள் கவலைப்பட்டார் கள்.

தன் நினைவு பெற்றதும் சுக்கிரீ வன் கும்பகர்ணனிடமிருந்து தப்பி வந்து விடுவான் என்று அனுமார் உறுதியாக நம்பினார். எனவே அவர் வானர வீரர்களிடம் கவலைப் பட வேண்டாம் என்று கூறி உற்சா கப் படுத்தினார்.

அனுமார் எதிர்பார்த்தபடியே சுக்கிரீவன் தன் நினைவு பெற்ற தும் தான் கும்பகர்ணனிடம் சிக்கி விட்டதைக் கண்டான். அவன் சட்டெனக் கும்பகர்ணனின் மூக்கை யும் காதையும் கடித்து அவனைத் திக்கு முக்காடச் செய்து அவனிட மிருந்து தப்பி ஆகாயத்தில் எம்பிச் சென்று இராமர் இருந்த இடத்தை அடைந்தான்.

சுக்கிரீவன் தப்பிப் போனது கண்டு கும்பகர்ணன் மீண்டும் போர்க் களத்திற்குச் சென்று வானரர்களை அழிக்கலானான். அப்போது இலட்சு மணன் அவனைத் தடுக்க முயலவே அவன் அதை மீறி இராமரை நோக் கிச் சென்றான்.

இருவரிடையே பலத்த போர் மூண்டது. பல மரங்களைத் துளைக்க உபயோகித்த அம்புகளையும் வாலி யைக் கொல்லப் பயன்படுத்திய பாணத்தையும் எடுத்து இராமர் கும்பகர்ணன் மீது எய்தார். ஆனால் அவை எல்லாம் கும்பகர்ணனை எதுவும் செய்ய முடியவில்லை. அப் போது இராமர் வாயுவாஸ்திரத்தை விட்டு கும்பகர்ணனின் வலக்கை யைத் துண்டித்தார்.

இதனால் கோபமடைந்த கும்ப கர்ணன் பலமாகக் கத்தித் தன் இடது கை கொண்டு போர் புரிய லானான். அக்கையால் ஒரு பெரிய மரத்தை பிடுங்கி இராமரைத் தாக்க லானான். இராமர் இந்திராஸ் திரத்தை எய்து கும்பகர்ணனின் இடது கையையும் வெட்டினார். அப்போது தன் உடலோடு அவன் இராமர் மீது பாய்ந்தான். இராமர் அவனது கால்களைத் துண்டித்துத்

தலையை உடலிலிருந்து வேறாகப் போய் விழச் செய்தார்.

கும்பகர்ணன் இறந்தது கண்டு இராட்சஸப் படைகள் பயந்து ஓடின. வானரப் படைகளோ வெற்றிக் களிப்பில் கூத்தாடின. இராவண னுக்கும் இந்த செய்தி போயிற்று. இதைக் கேட்டதுமே ஆவென அலறி விட்டான். அவனது மகன்களான தேவந்தகன், நராந்தகன், திரிசிரன், அதிகாயன் முதலியவர்களும் கண் ணீர் விட்டுக் கதறினார்கள். கும்ப கர்ணனுக்கு தம்பி முறையாகும் மகோதரனும் காபார்சுவனும் துக் கத்தில் மூழ்கிப் போனார்கள்.



கும்பகர்ணன் இறந்தது ராட்சஸர் களுக்குப் பெருத்த நஷ்டமே. இரா வணன் அவன் மீது பெரும் நம் பிக்கை வைத்திருந்தான். மிக்க பலம் பொருந்திய அவன் இராமரை யும் இலட்சுமணனையும் கொன்று வானரப்படைகளை விரட்டி அடித்து வெற்றிமாலை சூடி வருவான் என இராவணன் எண்ணி இருந்தான். ஆனால் அப்படி நடக்காமல் நேர் மாறாக நடந்து விட்டதே.

தன் நினைவு பெற்ற இராவணன் இனி இலங்கை வானரர் வசமாகி விடுமோ என்று பயந்தான். ஆனால் கும்பகர்ணனை இராமர் கொன்ற தால் அவரைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று ஆத்திரம் அடைந்தான். அவன் மனம் விபீ ஷணன் கூறிய நல்லுரைகளைக் கூட எண்ணிப் பார்த்து அதன்படி நடந்திருந்தால் இத்தகைய இழப்பு கள் நேர்ந்திருக்காதே என எண் ணிப் பச்சாதாபப்படத் தொடங் கியது.

இராவணனின் மனம் படும் வேதனையைக் கண்டு திரிசிரன் "மூவுலகையும் வென்ற தாங்களே இப்படி மனம் ஒடிந்து போகலாமா? என்னைப் போர்க்களத்திற்கு அனுப் புங்கள். நான் அந்த இராமனைக் கொன்று விட்டு வருகிறேன்" என்றான். அப்போது தேவாந்தக னும் நராந்தகனும் அதிகாயனும் தாமும் போர்க்களத்திற்குச் செல்வ தாகக் கூறினார்கள்.

அவர்கள் அவ்வாறு கூறியது இராவணனுக்கு ஆறுதலை அளித்த



தோடு உற்சாகத்தையும் மூட்டியது. கும்பகர்ணன் இறந்து போனாலும் இப்படிப்பட்ட வீரர்கள் இருக் கையில் தான் ஏன் கவலைப் பட வேண்டும் என்று எண்ணி அவன் தன் மனதைத் தேற்றிக் கொண்டான்.

இராவணனும் அவர்கள் கூறிய தைக் கேட்டு மகிழ்ந்து போய் அவர் களைப் போர்க்களத்திற்கு அனுப் பினான். அவர்கள் வானரர்கள் பயங்கரமாகத் தாக்கினார்கள். அது கண்டு சுக்கிரீவன் நராந்தகனை எதிர்த்துப் போரிட்டு அவனைக் கொல்லும்படி அங்கதனிடம் கூறினான். அங்கதனும் நராந்த கனுடன் போர்புரிந்து அவனைக் கொன்றான்.

அதுகண்டு திரிசரனும் தேவாந் தகனும் மகோதரனும் அங்கதன் மீது பாய்ந்தார்கள் அங்கதனும் அவர் களை எதிர்த்துப் போராடலானான். அதைக்கண்ட அனுமார் தேவாந்த கனைத் தாக்கி அவனை ஒரே குத் தில் வீழ்த்திச் சாகடித்தார். இதைப் போல நீலன் மகோதரனுடன் போர் புரிந்து அவனைக் கொன்றான். ரிஷபன் மகாபார்சுவனோடு கடும் போர் புரிந்து அவனை எமலோகத் திற்கு அனுப்பினான். இப்படியாக இராட்சஸ மாவீரர்கள் மடிந்தது கண்டு ராட்சஸப் படைகள் பயந்து ஓடின.

அப்போது அதிகாயன் போர்க் களத்திற்கு அட்டகாசமாக வந்தான். அவனைக் கண்ட இராமர் விபீஷ ணனிடம் "மலைபோல வரும் இந்த ராட்சஸன் யார்?" எனக் கேட் டார். விபீஷணனும் "இவன் இரா வணனுக்கும் தானியமாலினிக்கும் பிறந்தவன். இவன் பெயர் அதி காயன் என்பதாம். இவன் இரா வணனைப் போன்றே சக்தி படைத்த வன். இவன் பிரம்மாவைக் குறித்து தவம் செய்து சக்தி வாய்ந்த அஸ்தி ரங்களைப் பெற்றிருக்கிறான். தேவர் களாலும் ராட்சஸர்களாலும் தனக்கு மரணம் நேரிடக்கூடாது என்று வரம் பெற்றிருக்கிறான். அவன் அணிந்திருக்கும் கவசமும் அவன் அமர்ந்திருக்கும் ரதமும் பிரம்ம தேவன் அளித்தவையே. இவன்

பலமுறை தேவர்களைத் தோற்கடித்திருக்கிறான். இவனை இப்போதே ஒழிக்க வேண்டும். இல்லாவிட்டால் இவனால் நம் படைகளுக்குப் பெருத்த சேதமே விளையும்'' என்றான்.

இதற்குள் அதிகாயனை குமுதன், துவிதீயன், மைந்தன், நீலன், சரபன் ஆகியோர் ஒன்று கூடித் தாக்கினார்கள். ஆனால் அவர்களால் அவனை எதுவும் செய்ய முடியவில்லை. அவர்கள் எய்த பாணங்கள் அவனுக்கு எறும்பு கடிப்பது போலத்தான் இருந்தன.

அதிகாயன் இந்த வீரர்களைக் கடந்து நேராக இராமர் முன் போய் நின்றான். அவன் அவரிடம் ''என்னை எதிர்க்கும் துணிவு உனக்கு இருக்கிறதா?'' என்று சவால் விட்டான்.

இராமர் அவனை அலட்சியமாகப் பார்த்தார். அதிகாயனோ தன்னை எதிர்க்க இராமர் தயங்குகிறார் என நினைத்து விட்டான். அதனால் அவன் ''இராமா! ஏன் தயங்குகிறாய்? என்னை எதிர்க்கப் பயப்படுகிறாயா? நீ ஒரு சுத்த வீரன் என்பதை நிருபி'' என உரக்கக் கூவினான்.

இதைக்கேட்ட இலட்சுமணன் கோபம் கொண்டு அதிகாயன் முன் நின்று ''அடே! எங்கே உன் வீரத்தை முதலில் என்னிடம் காட்டு பார்க்கலாம்'' எனக் கூறினான்.



அதிகாயனோ ''இலட்சுமணா! நீ மிகவும் சிறியவன். என்னோடா மோதப் பார்க்கிறாய்? வேண்டாம். உன் உயிர் போகாதிருக்க வேண்டுமானால் விலகிப் போய்விடு'' என்று கூறினான்.

இலட்சுமணனோ ''அப்பனே! வெறும் வாய்ப் பந்தல் போடாதே. எங்கே உன் கைவரிசையைக் காட்டு. நீயே உன்னை மாவீரன் என்று தம்பட்டம் அடித்துக் கொண்டால் யாரும் அதை ஏற்க மாட்டார்கள்'' என்றான். இருவரிடையே பலத்த போர் மூண்டது. இலட்சுமணனின் தாக்குதலைக் கண்ட அதிகாயன் ''ஓகோ! இவன் நான் நினைத்தபடி சாதாரணப்பட்டவனல்ல'' என்று உணர்ந்தான். இலட்சுமணன் எய்த



அம்புகளைத் தடுத்து நிறுத்தலா னான். இதைக்கண்ட இலட்சுமணன் அவன் மீது பிரம்மாஸ்திரத்தை எய் தான். அது அவனது தலையைத் துண்டித்துக் தூரத்தில் போய் விழச் செய்தது.

அதிகாயனின் மரணம் ராட்சஸர் களை துயரக் கடலில் ஆழ்த்தியது. இந்தச் செய்தியைக் கேட்டு இரா வணன் இடிந்து போனான். இப் படியே வீரர்கள் ஒவ்வொருவராக மடிந்து கொண்டே இருக்கிறார் களே, வானரப்.படைகளை வெல்ல முடியவில்லையே என்று நினைத் துக் கவலைப்படலானான்.

இப்படியே தான் போர்க்களத் திற்கு அனுப்பும் வீரர்கள் எல்லாம் ஒவ்வொருவராக இறந்து கொண்டே போகிறார்களே என நினைத்து அவன் மனம் துக்கத்தால் வெதும்பி யது. இந்த இராமனையும் இலட்சு மனையும் வானரப் படைகளையும் எப்படித்தான் வெல்வது என்று அவன் பெரிதும் கவலைப்பட லானான்.

தன் தந்தை கவலைப்படுவதைக் கண்ட இந்திரஜித்தன் "தந்தையே! நான் இருக்கும் போது நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? என் அம்பு களுக்குத் தப்பினவர்கள் யாருமே இல்லை. இந்த இராமனையும் இலட்சுமணனையும் நான் கொன்று விட்டு வருகிறேன். இதோ, போர்க் களத்திற்குக் கிளம்பி விட்டேன். கவலையை விடுங்கள்" என்றான்.

அவன் இராவணனிடம் விடை பெற்றுக் கொண்டு உயர் ரகக் குதிரைகள் பூட்டிய தேரில் அமர்ந்து போர்க்களத்திற்குச் சென்றான். அவன் திவ்விய சக்தியை அடைய ஒரு ஹோமம் செய்ய முடிவு செய்து போர்க்களத்தில் தன்னைச் சுற்றி லும் ராட்சஸ வீரர்களை நிறுத்தி னான். அதன் பின் மந்திரங்களை ஜெபித்து ஹோமம் செய்யலானான்.

ஹோமம் முடிந்தது. பின்னர் அவன் தன் தேரில் அமர்ந்து வில் லின் நாணை மீட்டி எதிரொலிக் கச் செய்தான். பிறகு அவன் தானடைந்த சக்தியால் ஆகாயத் தில் எழும்பிச் சென்று மாயமாய் மறைந்து கொண்டான். ராட்சஸப்

படைகள் உற்சாகத்துடன் போர்க் களத்தில் இறங்கின. அவை வானரர் களைக் கடுமையாகத் தாக்கின.

இந்திரஜித்தன் மாயப் போர் புரியலானான். அவனது ஒவ்வொரு அடிக்கும் ஐந்நூறு வானரர்கள் வீழலானார்கள். வானரத் தலைவர் களின் மீதும் அவன் கடுமையான தாக்குதலை நடத்தினான். கந்தமாத னன், நளன், மைந்தன், கஜன், ரிஷ பன், அங்கதன், சுக்கிரீவன் ஆகி யோர் இந்திரஜித்தன் எய்த அம்பு களால் பலத்த காயம் அடைந்தார் கள். ஆனால், யாராலும் இந்திரஜித் தனைப் பார்க்க முடியவில்லை.

இந்திரஜித்தன் எய்த அம்புகள் இராமரையும் இலட்சுமணனையும் கூடத் தாக்கின. இராமர் இலட்சு மணனிடம் "இந்த இந்திரஜித்தன் எங்கே இருக்கிறான் என்று கூடத் தெரியவில்லையே. அதனால் நாம் அவனது அம்புகளால் அடிபட்டவர் கள் போல விழுந்து விடுவோம். அப்போது அவன் இலங்காபுரிக் குத் திரும்பிப் போய் விடுவான்" என்றார்.

ஆனால் அவர்கள் இருவரும் உண்மையிலேயே இந்திரஜித்தனின் அம்புகளால் விழுந்து விடவே இந்திரஜித்தனும் அவர்கள் இறந்து விட்டார்கள் என மகிழ்ந்து இலங்கா புரிக்குத் திரும்பிச் சென்றான். இந்திரஜித்தன் எவ்வளவு வானரர் களைக் கொன்றான் எனப் பார்க்க



அனுமாரும் விபீஷணனும் தீவட்டி களை எடுத்துக் கொண்டு போர் களத்தில் சுற்றிப் பார்க்கலானார் கள்.

அவர்கள் ஜாம்பவான் விழுந்து கிடப்பதைப் பார்த்தார்கள். ஜாம்ப வானும் "எனக்கு ஒன்றும் அவ்வள வாக பலமான காயம் இல்லை. அனுமார் பத்திரமாக இருக்கிறாரே அது போதும்" என்றான்.

விபீஷணனும் "அனுமாரை மட்டும் குறிப்பட்டுக் கேட்பா னேன்?" என்று வினவவே அவ னும் "அனுமார் இருந்தால் ஆயி ரம் படைகள் இருப்பதற்குச் சமம். அவர் இல்லாவிட்டால் நமக்கு பலமே இல்லாது போலாகிவிடும்" என்றான்.

அதுகேட்டு அனுமார் மகிழ்ந்து போய் ஜாம்பவானைப் பணிவுடன் வணங்கி நின்றார். அப்போது ஜாம் பவான் "அனுமானே! இனி நீதான் வானரர்களைக் காக்க வேண்டும்" என்றான்.

ஜாம்பவானும் விபீஷணனும் கீழே விழுந்து கிடக்கும் இராமன் இலட்சுமணன் ஆகிய இருவரின் மயக்க நிலையைப் போக்க முயன்றார் கள். அப்போது ஜாம்பவான் அனு மாரிடம் "நீ கடல் கடந்து இமய மலைக்குப் போ. அங்கு நீ மிக உயரமான காஞ்சன மலையையும் கைலாச பர்வதத்தையும் காண்பாய். அவற்றின் மத்தியில் ஔஷத பர்வ தம் உள்ளது. அதன் உச்சியில் நான்கு அபூர்வ மருந்துகள் உள்ளன. அவை மிகவும் ஒளிவிட்டுக் கொண்டிருக் கும். வைசல்யகரணி, மிருதசஞ்சீ வினி, சாவர்ணகர்ணி, சந்தான கரணி என்பவை அவை. இந்த நான்கையும் எடுத்துக் கொண்டு நீ சீக்கிரம் வர வேண்டும். அவற்றால் இறந்தவர்களை எல்லாம் உயிர் பெறச் செய்யலாம்" என்றான்.

உடனேயே அனுமார் ஆகாய மார்க்கமாக இமயமலைக்குச் சென் றார். அவர் கடலையும் பல மலை களையும் ஆறுகளையும் கடந்து இமயமலையை அடைந்தார். அங்கு அவர் பல உயரமான மலைச் சிகரங்களைக் கண்டார். பிரம்ம கோசம், கைலாசம்பர்வதம், இந்தி ரன் தவம் செய்த இடம், சித்திர பாண மோட்சகுண்டம், ஹயக்ரீவ க்ஷேத்திரம், பிரம்மகபாலம் ஆகிய இடங்களை அவர் கண்டார். இந் திரனுக்கு பிரம்மா வஜ்ஜிராயுதம் கொடுத்த இடம், குபேரனின் உறை விடம், பிரம்மஸ்தானம், சிவதனு க்ஷேத்திரம் ஆகியவற்றையும் கண் டார். முடிவில் அவர் கைலாசபர் வதத்திற்கும் காஞ்சனபர்வதத்திற் கும் மத்தியிலுள்ள ஔஷத பர்வதத் தைக் கண்டார். அங்கு தாம் தேடி வந்த நான்கு ஔஷதங்கள் எங்கே உள்ளன என்று பார்க்கலானார்.





# தூக்கம் வருமே!

காஷ்மீர நாட்டில் ஒரு வணிகன் இருந்தான். அவனுக்கு வியாபாரத்தில் லாபமே கிடைத்த போதிலும் மனதில் திருப்தி என்றே ஏற்படவில்லை. அதனால் அவனுக்குத் தூக்கமே வராமலும் இருந்தது.

இந்த வணிகன் மாணிக்க குப்தனைக் காண அவனது நண்பன் ஹீராசந்த் வந்தான். அவன் சாதாரணப்பட்ட குடும்பத்தில் பிறந்தவன். உள்ளதைக் கொண்டு திருப்தி அடைபவன். மாணிக்க குப்தன் தன் நண்பனிடம் தனக்குத் தூக்கமே வராதது பற்றிக் கூறினான்.

ஹீராசந்தும் சிரித்தவாறே "உனக்குத் தூக்கம் ஏன் வரவில்லை என்பது எனக்கு விளங்கிவிட்டது. நீ கொஞ்சம் காலம் உன் வியாபாரத்தைப் பற்றி முற்றிலும் மறந்து விட்டு வேறு ஏதாவது ஒரு உபயோகமற்ற வேலையில் ஈடுபடு. அப்போது தூக்கம் தன்னால் வந்துவிடும்" என்றான்.

மாணிக்க குப்தனும் "அது என்னால் முடியாதே நான் எதிலும் கணக்குப் பார்ப்பவன். நான் வியாபாரத்தை விட்டு வேறு வேலையை மேற்கொண்டாலும் அதில் கிடைக்கும் லாப நஷ்டங்களை. யோசித்துப் பார்ப்பவனாயிற்றே" என்றான்.

ஹீராசந்தும் "இது ஒரு பெரிய பிரச்னையே இல்லை. உனக்கோ இனியும் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. உன்னிடம் உள்ள பணம் ஏழு தலைமுறைக்கும் போதும். ஏதாவது ஒரு வெட்டி வேலையைத் தேர்ந்து எடு. அதில் லாப நஷ்டம் பற்றி யோசிக்க எதுவும் இராது" என்றான்.

இதே சமயம் பல மிருகங்கள்

—கி. வெங்கடாசலம்—



பாரத்தைப் பற்றி நினைக்காமலும் இருக்கலாம். ஏதோ ஒரு உபயோக மற்ற வேலையைச் செய்து பொழுது போக்கியதாக இருக்கும். இதனால் உனக்கு இரவில் நல்ல தூக்கமும் வரும்'' என்றான்.

மாணிக்க குப்தனும் தன் நண்பன் கூறியபடி நடக்க சம்மதித்தான். ஹீராசந்தும் மாணிக்க குப்தனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான். இதற்கு இரண்டு வாரங்களுக்குப் பிறகு நண்பன் எப்படி இருக்கிறான் எனக் காண ஹீராசந்த் வந்தான். அப்போது மாணிக்க குப்தன் மிகவும் கவலையோடு உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

ஹீராசந்தும் தன் மனதில் ''மாணிக்க குப்தனுக்கு இப்போது என்ன கவலை இருக்க முடியும்? நான் தான் அவனிடம் ஒரு வெட்டியான வேலையைச் செய்யச் சொன்னேனே. அதில் லாப நஷ்டம் பற்றி யோசிப்பதற்கு எதுவும் இல்லையே. ஆடுகளைத்தானே எண்ணிக் கொண்டு இருக்க வேண்டும்'' என நினைத்தான்.

அவன் தன் நண்பனைப் பார்த்து ''என்ன மாணிக்கம்! நான் சொன்னபடி நடந்துமா இப்படி இருக்கிறாய்?'' என்று கேட்டான். மாணிக்க குப்தனும் விரக்தியுடன் ''தூக்கமா? நீ சொன்னதுபடி திண்ணை மீது உட்கார்ந்து தெருவில் போகும் ஆடுகளைப் பார்த்

தெருவில் கத்திக் கொண்டு ஓடின ''என்ன சத்தம்'' என ஹீராசந்த் கேட்கவே மாணிக்க குப்தனும் ''தினமும் இந்தத் தலைவலிதான். இந்தத் தெருவில். ஆடுகளும் மாடுகளும் எப்போதும் போய்க் கொண்டே இருக்கும். வேறு வழி இல்லாமல் அவை போடும் சத்தத்தைச் சகித்துக் கொள்ள வேண்டி இருக்கிறது'' என்றான்.

ஹீராசந்த சற்று யோசித்து விட்டு ''நீ நாளை முதல் உன் வியாபாரத்தை மறந்துவிட்டு இந்த வேலையைச் செய். நீ காலையில் உன் வீட்டுத் திண்ணைமீது உட்கார்ந்து மாலை வரை இத் தெருவில் போகும் ஆடுகள் எவ்வளவு என்று எண்ணு. இதனால் நீ வியா

தேனா? நான் கணக்குப் பார்த்தது சரிதானா என்று ஊருக்கு வெளியே போய் அவை நின்ற இடத்திலும் எண்ணிப் பார்த்தேன். ஒன்றுக்கு மூன்று தடவை எண்ணிய பிறகு நான் முதல் எண்ணிய ஆயிரம் என்பது சரியே என உறுதி செய்து கொண்டேன்'' என்றான.

ஹீராசந்தும் "ஆயிரம் ஆடுகளா?'' எனவே! மாணிக்க குப்தனும் "ஆமாம். கணக்கு என்று வந்தால் எல்லாம் சரியாக எண்ணிப் பார்க்கத்தானே வேண்டும்? அந்த ஆடுகளிலிருந்து குறைந்தது நாலாயிரம் பவுண்டு ரோமம் கிடைக்கும்'' என்றான். ஹீராசந்த் முகத்தைச் சுளித்தவாறே "உன்னை ஆடுகளை மட்டுமே பார்க்கச் சொன்னேன். அவற்றின் ரோமம் பற்றிச் சொல்லவில்லையே என்றான்.

மாணிக்க குப்தனும் "இந்த ஊரில் கம்பளம் நேர்த்தியாக நெய்பவர்கள் இருக்கிறார்கள். இந்த ஆடுகளின் ரோமங்களை வெட்டிக் கொடுத்தால் அவர்கள் குறைந்தது மூவாயிரம் மீட்டர் கம்பளித் துணி நெய்து கொடுப்பார்கள். ஒரு மீட்டர் கம்பளி நூறு ரூபாய் என்று வைத்தாலும் மூன்று லட்சம் ரூபாய் கிடைக்கும்'' என்று கூறினான்.

ஹீராசந்தோ "போதும் நிறுத்து. இப்படிக் கம்பிளி வியாபாரம் பற்றி யோசித்தால் உனக்குத் தூக்கம் எங்கே இருந்து வரும்? இந்தப் பணம் வசூலாகிக் கைக்குக் கிடைக்கும் வரை நீ தூங்கப்போவதில்லை. இதற்கா உன்னிடம் ஆடுகளை எண்ணச் சொன்னேன்?''



என்று கேட்டான். மாணிக்க குப்தனும் பதில் எதுவும் கூறாமல் இருக்கவே "ஹீராசந்தும் "இதோ பார். தெருவில் போன ஆடுகள் எல்லாம் உன்னுடையவை அல்ல. அதனால் அவற்றின் ரோமம் பற்றி எண்ணி நீ கணக்குப் போட்டது சரியல்ல. இப்படி இல்லாததையும் பொல்லாததையும் நினைத்து வியாபார ரீதியில் நீ கணக்குப் போட்டுக் கொண்டே இருந்தால் உனக்குத் தூக்கம் எப்படி வரும்? உன்னைப் பிடித்து ஆட்டுவது வியாபார நோய். இது ஒழிந்தாலே உனக்குத் தூக்கம் வரும். இதற்கான முயற்சியைத்தான் நான் செய்து பார்த்தேன். ஆனால் அதில் தோல்வி தான் நான் கண்டேன். இனிமேல் என்னால் எதுவும் செய்யவும் முடியாது" என்றான்.

அப்போது மாணிக்க குப்தன் "இல்லை நண்பா! நீ எனக்கு வழி காட்டிவிட்டாய். நல்ல தூக்கம் வர என்ன செய்ய வேண்டும் என்பதை அறிவுறுத்தி விட்டாய். என் வியாபார நோயைப் போக்க என்ன மருந்து என்றும் கூறிவிட்டாய்" என்று உச்சாகத்துடன் கூறினான்.

ஹீராசந்த் கேலியாகச் சிரித்து "ஓகோ! மருந்தைக் கண்டுபிடித்து விட்டாயா? என்ன மருந்து அது? கொஞ்சம் சொல்லப்பா" என்றான். மாணிக்க குப்தனும் ஏதோ ரகசியம் சொல்பவன் போலத் தாழ்ந்த குரலில் "கேட்டுக்கொள். நான் இன்றே என் வியாபாரத்தை எல்லாம் என் மகன்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். இனி வியாபாரம் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் உன் போன்ற நண்பர்களோடு இருந்து காலம் கழிக்கப் போகிறேன். அப்போது மனதில் நிம்மதி ஏற்பட்டு நல்ல தூக்கம் வரும்" என்றான்.

"சபாஷ்! சரியான முடிவு" என்றான் ஹீராசந்த்.





# ஜமீந்தாரரே திருடன்!

ஒரு ஊரில் மிகக் கொடிய ஜமீன் தாரர் இருந்தார். அவர் தம் ஆட் களை ஏவி மக்களைக் கொள்ளை அடித்தும் பணம் சேர்த்து வந் தார். இந்தக் கொள்ளைகள் அவ் வூரருகே உள்ள காட்டில் அவ் வழியே போகும் பயணிகளிடம் நடக்கும். அதனால் மக்கள் அக் காட்டின் வழியே நடக்க அஞ்சி னார்கள்.

ஒருமுறை ஒரு பண்டிதர் அந் நாட்டு மன்னனிடம் பரிசுகள் பெற்று அவற்றோடு அக்காட்டு வழியே வந்து கொண்டிருந்தார். ஜமீன் தாரரின் ஆட்கள் திடீரென அவர் மீது பாய்ந்து அவரைக் கொன்று விட்டு அவர் கொண்டு வந்த பணத்தை எடுத்துக் கொண்டார் கள். அவர்கள் பண்டிதரின் உடலைப் புதைத்தும் விட்டதால் அப்பண்டிதரைப் பற்றிய தகவல் யாருக்குமே தெரியவில்லை.

சில வருடங்கள் கழிந்தன. அப் பண்டிதரின் மகன் தன் மகனைப் படிக்க வைக்க அந்த ஜமீன்தார ரின் ஊருக்கே அனுப்பினான். அந் தச் சிறுவனும் தன் ஆசிரியரிடம் நன்கு கல்வி பயிலலானான்.

ஒருமுறை அச்சிறுவன் காட்டு வழியே தன் ஊருக்குப் போய்க் கொண்டிருந்தான். அப்போது ஒரு கிழப் பிராம்மணன் அவன் முன் வந்து "குழந்தாய்! என் பின்னாலே வா. உனக்கு ஒரு உதவி செய் கிறேன்" எனக்கூறி அவனைத் தன்னோடு மரங்களிடையே அழைத் துச் சென்றான்.

சற்று தூரம் போனதும் அக்கிழ வன் ஒரு குளத்தில் இறங்கி ஒரு செம்பை எடுத்து வந்து அச்சிறு வனிடம் கொடுத்து "இதில் நிறை யத் தங்க நாணயங்கள் உள்ளன.

—வி. லாவண்யா—



நீ இதனை எடுத்துக் கொண்டு ஜமீன்தாரர் வீட்டிற்குப் போ. அப்போது இருட்டி விடும். ஜமீன்தாரரிடம் அவரது மாளிகையில் இரவில் தங்க அனுமதி கேள். அதன் பிறகு இதை பத்திரமாக வைத்து உன் ஊருக்கு எடுத்துச் செல்" என்று கூறிவிட்டுப் போனான்.

அச்சிறுவனுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. ஒரு கிழவர் தன்னை அழைத்துத் தனக்கு ஏன் ஒரு செம்பு நிறையத் தங்க நாணயங்கள் கொடுக்க வேண்டும். அதை எடுத்துக் கொண்டுபோய் ஏன் ஜமீன்தாரர் வீட்டில் இரவில் தங்க வேண்டும்? இதற்கு எல்லாம் ஏதாவது தக்கதொரு காரணம் இருக்கும் என நினைத்தான்.

அச்சிறுவனும் அந்த செம்போடு ஜமீன்தாரரின் மாளிகைக்குப் போய் அன்றிரவு அங்கு தங்கிப் போக அனுமதி கேட்டான். ஜமீன்தாரரும் அவனிடம் ஒரு செம்பு இருப்பதைப் பார்த்துவிட்டு அதில் ஏதோ விலையுயர்ந்த பொருள் இருக்க வேண்டும் என நினைத்தார். அதனால் அவனை இரவில் தன் மாளிகையில் தங்க அனுமதித்தார். இரவில் அச்சிறுவன் அயர்ந்து தூங்கும்போது அச்செம்பை அவர் எடுத்துப் பார்த்தார். அது கனமாக இருந்தது. அதைச் சுற்றிக் கட்டியிருந்த துணியை அவிழ்த்துப் பார்த்தார். அதில் நிறைய தங்க நாணயங்கள் இருந்தன.

ஜமீன்தாரர் அதிலிருந்த தங்க நாணயங்களை எடுத்துக்கொண்டு விட்டு செம்பைத் துணியால் கட்டி அச்சிறுவனின் பக்கத்தில் வைத்து விட்டு போய் விட்டார். மறுநாள் காலையில் எழுந்த அச்சிறுவன் செம்பைத் தூக்கியதும் அது கனமாக இராமல் இலேசாக இருப்பது கண்டு திடுக்கிட்டான். செம்பைக் கட்டிய துணியை அவிழ்த்துப் பார்த்தான். உள்ளே தங்க நாணயங்கள் இருக்கவில்லை.

அவன் ஜமீன்தாரரிடம் போய் "ஐயா! என் செம்பிலிருந்த தங்க நாணயங்கள் காணவில்லை. யாரோ திருடி விட்டார்கள்" என்று முறையிட்டான். அதுகேட்டு ஜமீன்

தாரர் கோபம் கொண்டு "அடே! நான் உன் நாணயங்களைத் திருடி விட்டதாகக் கூறுகிறாயா? உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று கூறி அவனை ஒரு அறையில் அடைத்து வைத்தார்.

ஜமீன்தாரர் ஊர்ப் பிரமுகர்களைக் கூப்பிட்டு "இந்தப் பொடிப் பயல் என்னைத் திருடன் என்கிறான். இவனைத் தூக்கில் போட்டால் என்ன?" என்றார். அப்பிரமுகர்களும் "ஆகா! அப்படியே செய்யுங்கள்" எனக் கூறினார்கள். சிறுவனைத் தூக்கிலிடப் போவதாக ஊர் முழுவதும் பறை சாற்றப் பட்டது.

தூக்கு மேடையுள்ள மைதானத்தில் மக்கள் கூடி விட்டார்கள். அச்சிறுவனும் தூக்கு மேடைக்கு கொண்டு வரப்பட்டான். அப்போது மக்களிடையே இருந்து ஒரு பிராம்மணர் வந்து ஜமீன்தாரரை அணுகி "இச்சிறுவனை எதற்காகத் தூக்கிலிடப் போகிறீர்கள்" என்று கேட்டார். ஜமீன்தாரரோ "இதைக் கேட்க நீ யார்?" என்று உறுமினார். அப்பிராம்மணரும் "நான் இவனது தாத்தா. இவன் எனது பேரன்" என்றார்.

ஜமீன்தாரரும் "உன் பேரன் எனக்கு திருட்டுப் பட்டம் கட்டி விட்டான். என் மானம் போய் விட்டது. அதற்காக இந்த தண்டனை" என்றார். அது கேட்டு பிரம்மணர் "அப்படியானால் அச்சிறுவன் கூறியது உண்மையா எனக் கண்டறியலாமே. அவன் சொன்னது உண்மையானால் உங்களை ஒரு பிரம்ம ராட்சஸன் தூக்கிச் செல்லலாம் எனப் பிரமாணம் செய்கிறீர்களா?" என்று கேட்டார்.

ஜமீன்தாரரும் "ஆகா! தாராளமாகப் பிரமாணம் செய்கிறேன்" எனக்கூறி அவ்வாறே பிரமாணம் செய்தார். மறுநிமிடமே அந்தப் பிராம்மணர் ஜமீன்தாரரைத் தூக்கிக் கொண்டு மாயமாய் மறைந்தார்.





# ஓர வஞ்சனையா!

மேல்பட்டி என்ற ஊரில் மங்களம்மா என்ற பணக்காரி இருந்தாள். அவளுக்கு இரு மகன்களும் ஒரு மகளும் இருந்தனர். மங்களம்மா தன் முப்பத்தைந்தாவது வயதில் தன் கணவனை இழந்தாள். அதன் பிறகு தன் மூன்று குழந்தைகளையும் அக்கரையுடன் வளர்த்து வந்தாள். மூவருக்கும் தக்க வயது வந்ததும் அதே ஊரிலேயே சம்மந்தம் பேசி கல்யாணமும் செய்து வைத்தாள்.

அவளது மூத்த மகனுக்கு இரு மகன்களும் இளைய மகனுக்கு ஒரு மகனும் ஒரு மகளும் பிறந்தனர். மகளுக்கு ஒரு மகள் பிறந்தாள். மங்களம்மா தன் பேரக்குழந்தைகள் மீது தன் மகன்கள், மகளை விட அதிக அன்பைச் சொறிந்தாள்.

பேரக் குழந்தைகள் வளரவே அவர்களது படிப்பு விஷயமாக இரு மகன்களும் யோசிக்கலாயினர். அப்போது மங்களம்மா "நீங்கள் இங்குள்ள நிலபுலன்களைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் என் பேரக் குழந்தைகளுடன் பட்டணத்திற்குப் போகிறேன். அங்கு ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு குழந்தைகளை நல்ல பள்ளிக்கூடத்தில் சேர்த்துப் படிக்க வைக்கலாம். அவர்களை நன்கு பார்த்துக் கொண்டு படிப்பு வளரவும் உடல் நலன் கெடாமலும் பார்த்துக் கொள்கிறேன். கவலை வேண்டாம்" என்றாள்.

இரு மகன்களும் அதற்கு இணங்கவே மங்களம்மா தன் பேரக் குழந்தைகளை அழைத்துக்கொண்டு பட்டணத்தில் இருக்கலானாள். பேரக்குழந்தைகளும் நல்லதொரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து நன்கு படித்து வரலாயினர்.

—காரை. குருமூர்த்தி—

கொஞ்ச நாட்களானதும் மங்களம்மாவின் மகளும் மருமகனும் தம் மகளை அழைத்துக் கொண்டு பட்டணம் போனார்கள். அவர்கள் மங்களம்மாவிடம் "எங்கள் மகளும் இங்கேயே இருந்து படிக்கட்டும். நம் ஊரில் நல்ல பள்ளிகூடம் இல்லை. இங்கே நல்ல பள்ளி இருப்பதால் மற்ற பேரக் குழந்தைகளோடு இவளையும் கவனித்துக் கொள்ள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். மங்களம்மாவும் அதற்கு ஒப்புக் கொண்டாள்.

ஆனால் அன்று முதல் மங்களம்மாவின் போக்கில் ஒரு பெருத்த மாறுதல் ஏற்பட்டது. அவள் எல்லாப் பேரக் குழந்தைகளையும் ஒன்றாக உட்காரவைத்து சாப்பாடு போட்டாலும் மகள் வயிற்றுப் பேத்திக்கு மட்டும் கூடக் கொஞ்சம் தயிர், நெய் என்று கொடுத்து வரலானாள். இதைக் கண்ட மற்ற பேரக் குழந்தைகள் அதனை எதிர்த்துப் பேச நினைத்தாலும் பாட்டியிடம் கொண்ட பயத்தால் எதுவும் கூறவில்லை. ஆனால் அவர்களில் மூத்த மகனின் மகனான சேகர் மட்டும் இது பற்றிக் கவலைப் படாமல் இருந்தான்.

பேரக் குழந்தைகள் ஒரு விடுமுறையின்போது தம் ஊருக்குச் சென்றனர். சேகரைத் தவிர மற்ற மூவரும் தம் தாய் தந்தையரிடம் பாட்டி தன் பெண் வயிற்றுப் பேத்திக்கு சாப்பாட்டில் காட்டும் சலுகைகளையும் தமக்கு அவ்வாறு காட்டாமல் போவதையும் பற்றிக் கூறினார்கள்.

அதைக் கேட்ட மூத்த மருமகள்



"ஏன் உங்கள் பாட்டிக்கு உங்களுக்கும் அதுபோல் தயிர் பால் கொடுக்க மனம் வரவில்லையா? இதென்ன ஓரவஞ்சனை!" என்று கத்தினாள். அப்போது சேகர் "அம்மா! பாட்டி எங்கள் எதிரில்தானே அத்தை பெண்ணிற்கு எல்லாம் கொடுத்தாள். ஒளிவு மறைவாக எதுவும் கொடுக்கவில்லையே இதில் ஓரவஞ்சனை என்ன இருக்கிறது?" என்றான்.

அவனது தாயாரும் "நானும் அதைத்தான் சொல்கிறேன். பந்தியில் ஓரவஞ்சனை எதற்கு? உங்களுக்கும் அதேபோலத் தயிர் பால் கொடுக்கக் கூடாதா?" என்று கேட்டாள் ஆவேசத்தோடு. சேகரோ "அம்மா! நாங்களெல்லாம் பாட்டி வீட்டுக் குழந்தைகள். அத்தையின் மகள் வேறு வீட்டுப் பெண்தானே. அதனால் அவளைப் பாட்டி கொஞ்சம் விசேஷமாகக் கவனித்தாள். அவ்வளவுதான். இதில் என்ன தவறு?" என்றான்.

அப்போது மங்களம்மா அங்கு வந்து "நீங்கள் இருவரும் பேசியதை நான் கேட்டு கொண்டுதான் இருந்தேன். சேகர்தான் எவ்வளவு புத்திசாலி! என் செய்கைக்கு எப்படி விளக்கம் கொடுத்தான் பார்த்தாயா? இந்தச் சின்ன விஷயத்தில் என்ன மனஸ்தாபம்? நாம் தயிர், பால், நெய் வாங்கத் தயங்குகிறோமா? இனிமேல் என் இந்தப் பேரக்குழந்தைகளுக்கும் தாராளமாகக் கொடுக்கிறேன்" என்றாள்.

சேகரின் தாயாரும் "ஆகா! என் மகனுக்கு உள்ள அறிவு எனக்கு இல்லையே. அவன்தான் தன் பாட்டியின் செயலுக்கு எப்படி விளக்கம் கொடுத்தான். புத்திசாலி" என மகிழ்ந்தாள் அதோடு அவள் தன் மாமியாரின் தாராள மனம் குறித்து எண்ணி மகிழ்ந்தாள்.



# இயற்கை விநோதங்கள்:



## போர்க்கப்பல்

ஆங்கிலத்தில் போர்க் கப்பலை 'மேன் ஆப்வார்' எனக் குறிப்பிடுவார்கள். இது உண்மையில் ஒரு நீர்வாழ் பிராணியின் பெயர். இதன் நீளம் 30 செ.மீ. அகலம் 15. செ.மீ. இந்த விசித்திரப் பிராணியை மாலுமிகள் 13-ம் நூற்றாண்டில் கண்டார்கள். பார்க்க இது போர்க் கப்பல் போல இருந்ததால் 'மேன் ஆப் வார்' என்ற பெயரை வைத்தார்கள். இது நீண்டதும் குட்டையுமான மீசை போன்ற உறுப்புகளைக் கொண்டிருக்கும். நீளமீசை போன்ற உறுப்பால் தன் இரையைப் பிடித்து குட்டையான மீசை அவயவத்தால் அதனை அரைத்துச் சாப்பிடும். இதன் மேல் பகுதி துருத்தி போல இருப்பதால் நீரில் எளிதில் மிதக்கிறது.

## காப்பியின் கதை!

எதியோபியாவில் ஒரு ஆடு மேய்ப்பவன் தன் ஆடுகள் ஏதோ ஒரு செடியின் பழங்களைச் சாப்பிட்ட பின் துள்ளிக் குதித்து ஓடுவதைக் கண்டான். இச்செடியை 'கபா' என்கிறார்கள். அப்படி அந்தப் பழத்தில் என்ன இருக்கிறது என்று பார்க்க அவனும் அவற்றைப் பறித்து சாப்பிட்டான். சற்று நேரத்தில் தான் புது உற்சாகம் பெறுவதை அவன் உணர்ந்தான். அவன் அப்பழங்களைப் பறித்து எடுத்துப் போய்த் தன் குருவிடம் கொடுத்தான். அவர் அதைக் கொண்டு ஒரு பானம் தயாரித்துக் குடிக்க அது தூக்கம் வராமல் தடுப்பதைக் கண்டார். அப்பழங்கள் 'கபா' செடியிலிருந்து கிடைத்ததால் அதற்கு காப்பி எனப் பெயர் ஏற்பட்டது.





## பீவர் எச்சரிக்கை

அணில் போலுள்ள இப்பிராணி உயர் மரங்களில் வாழ்கிறது. மரத்தில் குடைந்துதான் வசிக்க இடத்தை அமைத்துக் கொள்கிறது. மரங்கள் விழப் போவது தெரிந்தால் இது நீர் நிலயங்களுக்கு ஓடிப் போய் தண்ணீரில் தன் வாலால் பலத்த சத்தம் உண்டாக்கி மற்ற பிராணிகளை எச்சரிக்கிறது. இந்த சத்தம் கேட்டதும் மற்ற பிராணிகள் வேறு இடங்களுக்கு ஓடிப்போய்த் தம் உயிரைக் காத்துக் கொள்கின்றன.

little one a cuddles?












The

CHANDAMAMA

Collection of Soft Toys

CHANDAMAMA TOYTRONIX

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



K.S. Vijayakar



M. Kameswara Rao

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ செப்டம்பர் 10ந் தேதிக் குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

## ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **சின்ன அரும்பு மலரும்.**

இரண்டாவது போட்டோ: **சிரிப்பைச் சிந்தி வளரும்.**

பரிசு பெற்றவர்: **என். வி. எஸ். மணி, சேலம்-5**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

**சந்தாத் தொகை (ஆண்டிற்கு)**

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக் ரூ. 252.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்